


திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



பாருநீரெரிகாற்றினோடு ஆகாசமுமிவையாயினான்

பெருமா யிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம்

காரும்வார்பனிநீள்விசும்பிடைச் சோருமாமுகில்தோய்தர

சேருவார்பொழில்சூழ் எழில்திருவேங்கடமடைநெஞ்சமே!

*பூமி ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் என்கிற பஞ்சபூத ஸ்வரூபியானவனும் ஸஹஸ்ர நாமங்களாலும் பிரதிபாதிக்கப்படா நிற்பவனும் (கருமமடியாகப்) பிறத்தல் இல்லாதவனுமான எம்பெருமான் வளருகிற இடமானது—பெரிய ஆகாசத்தினின்றும் மழைநீரும் மிக்க பனித்துளியும் பெய்யப் பெற்றதும் (மேலுள்ள) காளமேகங்கள் வந்து படியும்படியாகப் பொருத்தமான உயரவோங்கியிருக்கிற சோலைகளாலே சூழப்பெற்றதும் அழகியதுமான திருவேங்கடமாம்; அதை நெஞ்சமே! அடை.*

*(பெரிய திருமொழி1-8-7)*

அக்டோபர், 1986

# ஸப்தகிரி

இதழ் 5 மலர் 17

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| கம்பன் காட்டும் திருவேங்கடம் | ... | 5 |
| உன் பெருமை ஆர் அறிவார் | ... | 9 |
| வத்ஸலா கல்யாணம் | ... | 11 |
| தேசியத் திருவிழா தீபாவளித் திருநாள் | ... | 13 |
| நலம் நல்கும் நவராத்திரி | ... | 15 |
| திருமலையில் பிரம்மோற்சவ வைபவம் | ... | 17 |
| மஹாதேசிகன் கண்ட திருமலை | ... | 19 |
| திருவேங்கட நவமணி மாலை | ... | 20 |
| திருமலை | ... | 21 |
| ஆயுத பூஜை | ... | 35 |
| கபீர்தாசர் காட்டும் கடவுள் | ... | 37 |
| துர்க்கையின் திருக்கோலங்கள் | ... | 41 |
| வேங்கடமும் விண்ணகரும் | ... | 43 |
| நவராத்திரி பண்டிகையில் தேவி உபாஸனை | ... | 45 |

### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முன்னட்டையில் | மகிஷாசுரமர்த்தினி —சித்திரம் கே. ஜெகதீஷ்-திருப்பதி. |
| 2-வது | திருமலைத் திருத்தேர் |
| 3-வது | திருமலை சக்ரஸ்நானம் |
| 4-வது | திருப்பதி அலிபிரி (மலை அடிவாரம்) |

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்.
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் ....

'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' 'பெண் என்றால் பேயும் இரங்கும்' 'பெண் புத்தி பின் புத்தி' என்றெல்லாம் வழங்கப்பட்டு வரும் பல (பழ)மொழிகள் யாவும் பெண்மையின் பெருமையினைப் பேச எழுந்த பட்டயங்களா அல்லது அதனைச் சாடும் கண்டனங்களா என்பதனை எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை. இக்குழப்பம் நமக்கு ஏற்படுவது, பெண்மையின் பெரும் சக்தியினை நாம் சரியாக அறிந்து கொள்ள முடியாதபோதுதான். ஓர் ஆண் தன்னை ஆட்கொள்வதில்தான் தன் பெண்மைக்கு 'அழகு' என்று நினைக்கிறாள் ஒரு பெண். அதுவே அவளுடைய பலம். ஆனால், ஒரு ஆண் அதனையே அவளுடைய பலவீனமாகக் கொண்டு தன் ஆதிக்கத்தை செயல்படுத்தும் போதுதான் பிரச்சனைகள் முளைக்கின்றன. பெண்மையினையே ஆராதித்து பெருமை அடைந்த நாடு பாரத நாடு. பெண்மை ஒரு பெண்ணாக மேலை நாடுகளில் மதிக்கப்படுகின்றபோது, இங்கு அது ஒரு தாய்மையாக ஆராதிக்கப்படுகின்றது. தாயின் சுவாசத்திலிருந்துதான் மனிதனின் மூச்சு ஆரம்பமாகிறது. தாய், மனைவி, மகள் என்ற நிலைகளில் பாசம், காதல், அன்பு ஆகியவற்றின் பெருமை பறைசாற்றப்படுகின்றன. இத்தகு பெண்ணின் பெருமை பேசிய இப்புண்ணிய பூமியில் ஏன் அவ்வப்போது ''ஸ்டவ் வெடிப்புகள்'' 'ஆடைகள் தீப்பற்றல்' '(தற்)கொலைகள்'!?

பெண்மையினை அடிமை கொண்டதாக என்றுமே எப்போதுமே நமது சமயம் குறிப்பாகக்கூட கூறவில்லையே. பெண்மையினை சக்தியாக வழிபட்டது நமது இந்து சமயம். சக்தியின்றேல் சலனமில்லை. சக்தியின் சேர்த்தியால்தான் அவ்இறைவனும் செயல்புரிகின்றான் என்பதை 'ச்ரத்தயா தேவோ தேவத்வ மச்னுதே' எனும் வேத வாக்யம் அறுதியிடுகின்றது. ஆண் புருஷ ஸ்வரூபத்தில் ஜீவ சக்தியாக இருந்திட, பெண் இயற்கை நிலையில் ஜட சக்தியாக விளங்குகிறாள். இவ் இரு சக்திகளின் கலப்பான மிதுன சக்தியால்தான் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் ஆகியன நடைபெறுகின்றன. இச்சக்தியின் பெருமையினை உணர்த்தத்தான் சங்கரன் அவளை தன் தலையில் மட்டுமல்லாது, தனது உடலில் பாதியாக ஏற்றான்; மாலவன் தன் மார்பில் இருத்திக் கொண்டான். பிரமன் தன் நாவில் வைத்தான். ஒருவன் இதயத்தால் தூய்மையானவனாகவும், சொல்லால் நல்லவனாகவும், செயலால் உறுதியுள்ளவனாகவும் இருத்தல் வேண்டும் என்பதையும், அவற்றிற்கு அச்சக்தியே உறுதுணையாக இருக்கிறாள் என்பதையும் அம்மும்மூர்த்திகளும் விளக்குகின்றனர். புத்தி, பலம், ஜீவன் ஆகியவற்றின் கலப்பான இச்சக்தி மும்மூர்த்திகளின் ஜட சக்தியாக இருந்து இச்சை, கிரியை, ஞானம் ஆகியவற்றின் மறுஉருவமாக அமைந்து, ஸத்துவத்தில் தாமஸ குணமாகவும் ஸத்துவத்தில் ரஜோ குணமாகவும் ஸத்வத்தில் ஸத்வமாகவும் திகழ்ந்து, அவ்வவ் ஜீவசக்திகளோடு ஒன்றித்து சேஷ சேஷி பாவம் ஒழிந்து ஏகபாவத்துடன் செயல்புரிகின்றாள்.

கடவுள் நிலையிலேயே இச்சிறப்புப் பெறும் இப்பெண்மையின் பெருமை ரிக்வேதத்தில் 'ராத்திரி' என்ற பகுதியிலும், மைத்ரேயி சம்ஹிதையிலும் பேசப் பெறுகின்றது. போர் புகுமுன் தருமத்தின் நாயகனும் ராமனும், தருமனின் தமையனும் பார்த்தனும் அச்சக்தியை வழிபட்டே சென்றனர். சக்ரேஸ்வரி, சாந்தா, ஜ்வலா, சுதாரா என்று ஜைனர்களாலும், வஜ்ரவராஹி, தாரா என்று பௌத்தர்களாலும் அழைக்கப்பட்ட இச்சக்தியின் வழிபாடு 'மொஹஞ்சதரோ ஹாரப்பா' நாகரீக காலத்திலும் வெகு தீவிரமாக இருந்து வந்துள்ளது.

அன்பு, இரக்கம், பாசம் ஆகியவற்றின் மறு உருவமாக திகழும் இச்சக்தி பொய், துரோகம் துவேஷம்ஆகியவற்றை எதிர்கொண்டால் அங்கு அச்சக்தியின்நிலை என்ன என்பதையும், அதனால்ஏற்படும் விளைவுகள் என்ன என்பதையும் நரகாசுரன், மகிஷாசுரன் முடிவும், மதுரையின் எரிப்பும், இந்திய சரித்திரம் கூறும் சில பல பெண்ணரசிகளின் போர்க்கோல செய்திகளும் நமக்கு நன்கு புரிய வைக்கும். நம்மில் தீய குணங்கள் அழிதல் வேண்டும் என்பதற்கு அழித்தல் சக்தியான மலைமகளையும், நற்பண்புகள் அளித்து ஆன்மீகச் சூழ்நிலையில் அமிழ்ந்திட, அளிக்கும் சக்தியான திருமகளையும், இவ்விரண்டும் நாம் அடையப் பெற்றால் உண்மை அறிவினை-ஆன்ம ஞானப்பேற்றினை எளிதில் அடையப் பெறலாம் என்பதற்கு ஞானச் செல்வியான கலைமகளையும் நாம் 'நவராத்திரி', எனும் விழாவின் மூலம் கொண்டாடுகிறோம்.

இம்முச் சக்திகளுக்கும் முக்கியத்வம் அளிக்கும் வகையில் கொண்டாடப்பெறும் இவ் 'நவராத்திரி' விழாவினை ஒரு பெண்கள் விழாவாகக் கொள்ளாது, நமது வாழ்வின் முதல் குருவான இப்பெண்மையின் அரும்பண்பியல்புகளை எண்ணி வியந்து, வாழ்க்கையில் ஒரு நல்ல தனையனாக, தலைவனாக, தந்தையாக விளங்கினால், அதுவே நாம் அப்பெண்மைக்குக் காட்டிடும் பெரும் நன்றியாக அமைந்திடும்.

# செய்திச் சுருக்கம்

**திருமலை பிரம்மோற்சவம் :**

இவ்வருடத்திய வருடாந்திர பிரம் மோற்சவம் 4-10-86 முதல் 12-10-86 வரை திருமலையில் வெகுச் சிறப் புடன் நடைபெறும். இவ்வுற்சவத் தில் 8-10-86 அன்று நடைபெறும கருட சேவை, 11-10-86 அன்று நடைபெறும் திருத்தேர் மற்றும் 12-10-86 அன்று நடைபெறும் சக்ர ஸ்நாநம் மிகவும் சிறப்புடையன. இதுபோது, ஆர்ஜித பிரம்மோற் சவம் நடந்த விரும்பும் பக்தர்கள் ரூ. 1000/- செலுத்தி பங்கேற்கலாம். இப்பிரம்மோற்சவ நாட்களின்போது ஆர்ஜித சேவைகளான திருப்பா வாடை, ஸகஸ்ர கலசாபிஷேகம் போன்றன நடைபெறாது. முன்கூட் டியே தங்கு வசதிகளுக்காக பதிவு செய்து கொள்ளும் வசதி 2-10-86 முதல் 12-10-86 வரை அமுல் படுத்தப்படமாட்டாது. முன் வரு பவர்களுக்கு முன்வசதி கொடுக்கப் படும்.

**நித்ய அன்னதான அறக்கொடை :**

திருமலையில் தி. தி. தே. செயற் படுத்தி வரும் நித்ய அன்னதான திட் டத்தின்கீழ் நாள்தோறும் ஆயிரக் கணக்கான யாத்திரிகர்களுக்கு இல வசமாக முழுச் சாப்பாடு வழங்கப் பட்டு வருகின்றது. இதற்கென பல பிரமுகர்கள் பொருள் நன்கொடை அளித்துள்ளனர். இவ்வகையில் கல் கத்தாவைச் சார்ந்த திரு போத்தார் அறநிறுவனத்தார் மீண்டும் இரண் டாம் தடவையாக ரூ. 10 இலட்சம் இத்திட்டத்திற்கு அளித்துள்ளனர், இதுவரை இத்திட்டத்திற்கு 9 நபர் கள் ரூ. 110 இலட்சம் வழங்கி யுள்ளனர். இத்தொகையினால் வரும் வட்டித் தொகை கொண்டு (தி. தி. தே. தன் பங்காக ரூ. 110 இலட்சம் வழங்கியுள்ளது) நாள் தோறும் 10,000 யாத்திரிகர்களுக்கு இலவசமாக முழு உணவுவழங்கப்படு கின்றது.

**மற்றைய செய்திகள் :**

திருமலையில் உள்ள தி. தி. தேவஸ் தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா உணவக மையத்திற்காக எரிவாயு, இயந்திர எண்ணெய், மற்றும் சமை யல் வாயு ஆகியவற்றிற்காக 1986-87 ஆண்டுக்காக ரூ. 24 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது தி. தி. தேவஸ் தான கல்யாண மண்டபங்களை, திரு மண நிகழ்ச்சிகளுக்கு முதலிடம் தந்து, பிறகு அவை இல்லாத போது, இரட்டிப்பு வாடகைக்கு வியாபார நோக்கத்துடன் கூடிய நிகழ்ச்சி களுக்கு ஒதுக்க முடிவு செய்யப்பட் டுள்ளது. அரசியல் மற்றும் சர்ச்சைக் குரிய நிகழ்ச்சிகளுக்குக் கல்யாணமண் டபங்கள் வழங்கப்பட மாட்டாது.

**சந்திர கிரகணம் :**

17-10-86 அன்று 'சந்திர கிர கணம்' ஏற்பட இருப்பதால், திரு மலையில் அன்று 'ஸர்வ தரிசனம்' காலை 9 மணி முதல் மாலை 5 மணி வரை மட்டுமே இருக்கும். மாலை 6.30 மணிக்கு ஏகாந்த சேவைக்கு அனுமதிக்கப்படுவர். ஆர்ஜித சேவை களான கல்யாணோற்சவம், வாகன சேவை, பிரம்மோற்சவம் மற்றும் ஊஞ்சல் சேவை முதலியன மதியம் 12 மணி முதல் மாலை 4 மணிக்குள் நடைபெறும்.

---

ஐயா,

சென்ற மாதம் நானும், என் கண வரும் அமெரிக்கா சென்று இருந் தோம்.

இங்கு ஜம்ஷெட்பூரில் உள்ள ஸ்ரீனி வாஸர் கோவில் கல்யாண உற்சவத் திற்குப் பணம் கட்டி இருந்தோம். ஆனால் அது நடக்கும் சமயம் நாம் இந்தியாவில் இருக்க முடியாது என்று சொல்லிக் கொண்டே சென்றோம். ஒவ்வொரு வருடமும் கண்டுகளிக்கும் இந்த வைபவத்தை இந்த ஆண்டு காண முடியாதே என்று நினைத்த படியே கிளம்பினேன்.

என்ன ஆச்சர்யம், நாங்கள் பிட்ஸ் பர்க்கில் உள்ள ஸ்ரீனிவாஸரை தரி சிக்கப் போன போது அங்கு பல இந்தியக் குடும்பங்கள் ஒன்றுசேர்ந்து கல்யாண உற்சவம் செய்து கொண்டு இருந்ததைப் பார்க்க என் கண்களை என்னால் நம்பவே முடியவில்லை. என் ஆசையை அமெரிக்காவிலும் தீர்த்து வைத்த பகவானின் லீலையை எண்ணி மெய் சிலிர்த்தது. இதனை 'ஸப்தகிரி' புத்தக வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்பட்டு எழுதுகிறேன். இந்த அனுபத்தை பலரும் அடையும் படி ப்ராத்திக்கிறேன். உலகின் மறு கோடியில் இருந்தும் நம் ஆசையை தீர்த்து வைத்தார் என்றால் நம்மிடம் அவர் எதிர்பார்ப்பது பக்தி ஒன்று தான் என்பதை நிதர்சனமாகக் கண் டேன்.

கல்யாணி தேவநாதன்.
ஜம்ஷெட்பூர்.

1986 ஜூன் மாத ஸப்தகிரியில் திரு. கே. நாகராஜன் எழுதிய "ஹரி யும் சிவனும்" என்ற கட்டுரை மாதிரி பல கதைகள் வந்தால் இந்துக்களுக் குள்ளே இருக்கும் சிறு வேற்றுமை களையும் குரோதமும் குறையும். அடிக்கடி இப்படிப்பட்டக் கதைகளை எழுதும்படி ஆசிரியர்களைக் கேட்டுக் கொள்ளவும்.

அடுத்தது 'பாரதியார் வேண்டிய வரம்' என்ற தலைப்பில் திருமதி. கமலா மாரியப்பன் எழுதிய கட்டுரை. பாரதியாரைப்பற்றி அவர் அரசியல் வாதி என்ற ரீதியில்தான் அவரு டைய விடுதலைப் பாடல்கள் தமிழ் நாட்டில் பட்டித் தொட்டிகளிலெல் லாம் பாடப்பட்டது. பாரதியார் அரசியல்வாதி மட்டுமல்ல, ஆத்மீக வாதி என்பதை அக் கட்டுரையில் குழந்தைகளும் மனனம் செய்யக் கூடிய இனிய பாடலும் இதற்கு எளிமையான விளக்கமும் அப்படியே மனதில் பதியக் கூடியவை. பாரதிப் பாடல்களில் பக்திப்பாடல்களை (கண் ணன் பாட்டு உள்பட) எழுதி விளக் கமும் செய்து வந்தால் சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை பயன் அடைவார்கள் என்பதைத் தெரிவித் துக் கொள்கிறேன். பத்திரிகையில் மற்ற அம்சங்களும் பாராட்டப்பட வேண்டியவைதான். திருமதி. கமலா மாரியப்பனுக்கு நன்றி.

திரு. ஏ. பி. சீனிகரையாளர்
புத்தூர்.



திரு. டி. எஸ். திருவேங்கடம் - திருப்பதி.

பொய்கையாழ்வார் இப்பாடலில் எம்பெருமான் நின்ற மலையான திருவேங்கடமலையின் மீது ஆருக் காதல் கொண்டதினால், அம்மலையின் மேன்மையை மிக அருமையாக முதல் திருவந்தாதியில் எடுத்து இயம்புகின்றார். அதுபோன்றே கம்பரும் அதன் பெருமையைத்தக்கஇடத்தில்இடம்நோக்கி அமைத்துள்ளார்.

இராமாயணத்தில் கிட்கிந்தா காண்டத்தில் 'நாட விட்ட படலம்' என்ற ஒரு படலம் வருகின்றது. இப்படலத்தின் துவக்கத்தில் சுக்கிரீவன் இராமனிடம் தன்னுடைய எழுபது வெள்ளச் சேனையின் அளவைக் காட்டுகிறான். அத்தோடு மட்டுமின்றி இச்சேனைகட்குத் தலைவனான நீலனையும் அறிமுகப்படுத்துகின்றான். இராமன் வானர சேனைகளின் அளவைக் கண்டு மகிழ்கிறார். பின்னர் சுக்கிரீவனைநோக்கிச் சீதையைத் தேடுவதில் சிந்தையைச் செலுத்துக என்கிறான்.

சுக்கிரீவனும் அவ்வாறே தேட உடன்பட்டு இராவணனின் நகரம் தென் திசையில் இருக்க வேண்டும் என்று உய்த்துணர்ந்து அத்திசையில் செல்ல வல்லவர்களான வானர வீரர்களைத் தேர்ந்தெடுக்கிறான். அநுமான், அங்கதன், சாம்புவான் போன்ற சிறந்த வீரர்களைத் தென்

# கம்பன் காட்டும் திருவேங்கடம்

ஆழ்வார்களின் பாடல்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர் கம்பர். தன் நூலை, ஆழ்வார்களை அடி யொற்றியே பல இடங்களில் பாடியுள்ளார். ஆழ்வார்களின் சொற்றொடர்களில் அவர் பெரிதும் லயித்துப்போய் அனுபவித்து அனுபவித்துப் பரவசமடைந்து அப்படியே அதை தம் நூலில் கையாளும் அளவிற்கு பேரீடுபாடு கொண்டவர்.

இடந்தது பூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனை முன்னஞ்ச -
கிடந்ததுவும்
நீரோத மா கடலே நின்றதுவும்
வேங்கடமே
பே ரோத வண்ணர் பெரிது
—[முதல் திருவந்தாதி-39]

வைணவக் கொண்டல்
திரு. ஜி. இலட்சுமணன், M.A.,B.Ed.,
கிருஷ்ணன்குப்பம்.

திசை நோக்கி அனுப்பத் தீர்மானிக்கிறான். இவ்வாறு மற்ற திசைகளிலும் வானர வீரர்களை அனுப்புகிறான்.

அவர்கள் அனைவரும் ஒருமாத காலத்திற்குள் தேடிமுடித்து விட்டு வந்து சேரவேண்டும் என்றும் ஆணை பிறப்பிக்கப்படுகிறது. அப்போது அவர்கள் தேடவேண்டிய இடங்களாகவும் காணவேண்டிய இடங்களாகவும் பல இடங்கள் குறிப்பிடப்

படுகின்றன. அப்படிக் காண வேண்டிய இடங்களில் திருவேங்கடமலையும் ஒன்று என்று சுக்கிரீவன் சொல்லி முடிக்கிறான்.

அப்படிப்பட்ட நிலையில் பிற இடங்களைப் போல் சாதாரணமாய்க் குறிப்பிடாமல் திருவேங்கடமலையின் சிறப்பை எண்ணிய கம்ப நாட்டாழ்வார், ஆழ்வார்கள் அனுபவித்து அதன் பெருமையைப் பாடியுள்ளார்.

"குன்றம் ஏந்தி குளிர் மழை காத்தவன்
அன்று ஞாலம் அளந்த பிரான்; பரன்
சென்று சேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே"
[திருவாய்மொழி 3-3-8]

என்ற நம்மாழ்வார் கருத்தை அடியொற்றி அப்படியே பாடியுள்ளார். எம்பெருமான் எழுந்தருளியுள்ள அம்மலையின் பெருமையினைச் சுக்கிரீவன் வானர வீரர்களுக்குக் கூறுகின்றான். அது எப்பேர்பட்ட குன்றம்! சிகரங்கள் பொருந்திய குன்றம். பெருமை பொருந்திய அம்மலையை அணுகு வீராயின் நெடுங்காலத் தொடர்புடைய கொடிய பாவங்கள் எல்லாம் நீங்கி, நீங்கள் முக்தி அடைவீர்கள். ஆகவே அம்மலையை அணுகாமல் விலகிச் செல்லுங்கள் என்கிறான்.

அம்மலையை அணுகினால் பாவங்கள் எல்லாம் நீங்கப் பெற்று முக்தியடைய நேரிடும். அதனால் சீதையைத் தேடிச் சென்ற பணி கெட்டு விடும். எனவே அம்மலையை அணுக வேண்டாம் என்று கூறி அம்மலையின் பெருமையைப் பேசுகின்றான்.

கோடுஉறு மால் வரை யதனைக்
குறுகுதிரேல்
உம் நெடிய கொடுமை நீங்கி
வீடு உறுதிர் அதலின் விலங்குதிர்
—[கிட்கிந்தா-நாட-28]

என்று பாடுகின்றார். இக்கருத்து ஆழ்வார்களை அடியொற்றி அதை மனதில் கொண்டே பாடியுள்ளார் எனலாம். இதே கருத்தை பல நூல்கள் கையாளுகின்றன. வேங்கட மலையினை அணுகுபவர் வினை என்னும் பெருங்கடலை நீந்தியவர்கள் ஆவார்கள். இவ்வுலகத்துத் துன்பமெல்லாம் நீங்கப்பெற்று வீடுபேற்றை அடையலாம் என்றெல்லாம் அவை கூறுகின்றன.

வெறிகொ ளறையருவி வேங்கடத்துச்
செல்லின்
நெறிகொள் படிவத்தோய் நீயும்—
பொறிகட்கு
இருளீயும் ஞாலத் திடரெல்லாம் நீங்க
அருளீயும் ஆழி அவன்
[பு-வெ-9-42]

என்று கூறுகின்றது. இப்படி வேங்கட மலையை அடைபவர்கள் தம் பாவ புண்ணியம் நீங்கப் பெற்று வீடுபேற்றை அடைவார்கள் என்று பல நூல்களின் கருத்தைக்கம்பர்கையாண்டுள்ளார்.

இதே கருத்து திருவாய்மொழியில் அமைத்தருளுகிறார் நம்மாழ்வார், ஞான தசையில் தன் பேச்சாகவும், ப்ரேம தசையில் பெண் பேச்சாக அமைந்த பாடலில் கிளியினிடம் தலைவி தூது பேசுகிறாள்.

"ஒரு வண்ணம் சென்று புக்கு எனக்
கொன்றுரை ஒண்கிளியே
செரு வொண் பூம்பொழில் சூழ்
செக்கர் வேலைத் திருவண்வண்டூர்
கருவண்ணம் செய்யவாய் செய்யகண்
செய்யகை செய்யகால்
செருவொண் சக்கரம் சங்கு
அடையாளம் திருந்தக் கண்டே"
[திருவாய்மொழி 6-1-7]

இதில் "ஒரு வண்ணம் சென்று புக்கு" என்பதற்கு ஈட்டு வ்யாக்யாணத்தில் "அன்றிக்கே வழி வழி நெஞ்சை அபகரிக்கும் யோக்யதையை உடைத்து அதிலே கால் தாழாதே! வருந்தி ஒருபடி சென்று புகுங்கோள்" என்கிறார்.

மலைநாட்டு திருப்பதியான திருவண் வண்டூரில் வழியெல்லாம் நெஞ்சுக்குக் கொள்ளை கொள்ளும் புவியியல் பொழிலும், நீர் நிலைகளும் நிறைந்திருக்குமிடம். அவற்றில்



கண் செலுத்தினால் அவற்றை அனுபவிக்க வேண்டுமென்று மனம்சென்று பாயுமேயன்றி, எம்பெருமானிடம் சென்று சேரமுடியாது. எனவே வழியின் கண் செலுத்தாமல் ஒருவாறு வழியினைக் கடக்க வேண்டும் என்பது இதற்குப் பொருள்.

இக்கருத்தைத்தான் அப்படியே கம்பநாட்டாழ்வார் கையாண்டார்.

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து" என்று வடவேங்கட மலை பற்றி தொல்காப்பிய பாயிரம் பேசும். வேங்கட மலையை தமிழ் வழங்கும் நாட்டிற்கு எல்லையாகக் கூறுதல் பண்டையோர் இயல்பு. அவ்வியல்பை அடியொற்றி அப்படியே அம்மலையின் பெருமையைப் பேசும் போது கம்பர் கூறுகின்றார்.

நான்கு வேதங்களும், அவற்றைத் தழுவி எழுந்த மற்றைய நூல்களான சிட்சை முதலிய வேதாங்கங்களும், புராணங்களும் கூறுகின்ற பொருள்களுக்கெல்லாம் மேலான பொருளான திருமாலைத் தன்பால் கொண்டுள்ளமையால் "நான் மறையும் மற்றை

நூலும் இடை சொற்ற பொருட் கெல்லாம் எல்லையதாய் "என்று பாடு கின்றார்.

புகழ் நிகழ்தற்குக் காரணமானது வாய்மை. இவ்வாய்மையானது, இவ்வுலகத்தில் தனக்கு ஒப்பு உவமை இன்றிப் பொலிந்து நிற்றல் போன்று வேங்கடமலையும் தனக்கு ஒப்புவமை இன்றிபொலிந்துநிற்கின்றது.இம்மலை தேனடைகள் சூழ்ந்துள்ள குளிர்ந்த தாழ்வரைகளை உடையது. அத்தகைய உயர்ந்த மலையை சென்று சேருவீர்கள் என்கிறான் சுக்கிரீவன். ஆயினும் பின்னால், அதனை நெருங்கிவிடாதீர்கள். நெருங்கினால் நீங்கள் எண்ணிச்சென்ற காரியம் வீணாகி விடும் என்கிறான்.

" வடசொற்கும் தென்சொற்கும்
வரம்பிற்றாய்
நான் மறையும் மற்றை நூலும்
இடை சொற்ற பொருட்டு எல்லாம்
எல்லையதாய்
நல் அறத்துக்கு ஈறாய் வேறு
புடை சுற்றுந் துணையின்றிப் புகழ்
பொதிந்த
மெய்யே போல் பூத்து நின்ற
அடை சுற்றும் தண் சாரல் ஓங்கிய
வேங்கடத்தில் சென்று அடைதிர்
மாதோ
[கிட்-நாட-26]

மற்றொரு பாடல் இவ்விரு வினைகளைப் பற்றியும் பேசுகின்றது. அவ்வினைகள் நீங்கப் பெற்ற ஞானிகள் அம்மலையில் உள்ளனர் என்றும் கம்பன் காட்டுகின்றான். அத்தகைய ஞானிகள் இருக்கும் திசை நோக்கி அடி வணங்கத் தக்கப்பெருமை உடையவர்கள் அவர்கள்.

செல்வத்தில் சேர்ந்த இந்திரத் திருவினையும் வறுமையில் இழிந்த இரவையும் ஒப்பத் தெளிந்தவர் அந்த ஞானிகள். அதாவது வினையின் நீங்கி விளங்கிய அறிஞர். இப்பிறவி உண்டாவதற்கு மூல காரணம் வினையே என்று ஆராய்ந்து உணர்ந்து, அவ்வினையை

நீக்குவதற்குரிய வரம்பில்லாத தத்துவ ஞானத்தைப் பெற்றுள்ளார்கள். நீக்குவதற்குரிய அவ்வினையின் பெரிய பகைவர்கள் அம்மலையில் உள்ள அத் தத்துவஞானிகளே ஆவர். அத்தகைய சிறப்பு பொருந்திய மலையின் அருமையை என்னவென்று சொல்வது. அது தொழத்தக்க மலையன்றோ என்கிறான்.

"இரு வினையும் இடைவிடா எவ்வினையும்
இயற்றுதே இமையோர் ஏத்தும்
திருவினையும் இருபதம் தேர்
சிறுமையும்
முறை ஒப்பத் தெளிந்து நோக்கி

கரு வினையது இப்பிறவிக்கு என்று
உணர்ந்தாங்கு
அதுகளையும் கடை இல் ஞானத்து
அரு வினையும் பெரும் பகைஞர்
ஆண்டு ஊர்; ஈண்டு
இருந்தும் அடி வணங்கற் பாலார்
(கிட்-நாட-27]

அவ் வேங்கடமலையின் பெருமைகளை இன்னும் பலபடியாய்க் கூறுகின்றார் ஆசிரியர். அவ்வேங்கடமலையானது தூய்மையான நல்ல ஆடைகளை அணிகின்ற மனத் தூய்மையானவர்களான அந்தணர்கள் நீராடுகின்ற துறைகள் பலவற்றை உடைய ஆறுகளை உடையது. வேதமாகிய பழைய நூலை உணர்ந்த பெரும் தவத்தையுடைய முனிவர்கள் வந்து தங்குகின்ற சிறந்த ஆசிரமங்கள் பலவற்றை உடையது. தேவமாதர்கள் தம் இசைக்கு ஏற்ப யாழ்களை மீட்டவும், அதனால் உண்டான ஓசையினால் யானைகளின் இளங் கன்றுகளும், புலிக்குட்டிகளும் பகையின்றி உறங்குகின்ற சிறந்த இடம் வேங்கடமலையாகும்.

வகையறு நுண் கேள்வி வாய்வார்கள்
நாளும்
புகை விளக்கும் பூம்புனலும் ஏந்தி-
திசை திசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்
வேங்கடமே வெண்சங்கம்
ஊதிய வாய் மாலுகந்த ஊர்
—[முதல் திருவந்தாதி-37]

இவ்வாறு முறையாக வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கட மலையின் பெருமையினை பிரபந்தம் சொல்லும் கருத்தை அப்படியே அடியொற்றி இராமாயணத்தில் பாடுகின்றார் ஆசிரியர். இப்பாடலை ஆழ்ந்து கற்று அதில் பேரீடுபாடு கொண்ட காரணத்தினால் வேங்கட மலையின் பெருமையினை இத்தனை அருமையாகப் பாட முடிகின்றது அவரால்.

மறையோர்கள் பற்றி கூறுகின்ற செய்தி எண்ணி, எண்ணி இன்புறத்தக்கது. திவ்வியப் பிரபந்தத்தை அடியொற்றி, தான் கண்ட திருவேங்கடமலையின் எழிலை சுக்கிரீவன் கூற்றாக வைத்துப் பாடுகின்றார் கம்ப நாட்டாழ்வார்.

"தோதவத்தித் தூய் மறையோர்
துறை ஆடும்
நிறை ஆறும், சுருதித் தொல்நூல்
மாதவத்தோர் உறைவிடனும்,
மழை உறங்கும்
மணித்தடனும் வான மாதர்
கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு
வருடு தொறும் கிளக்கும் ஓதை
போதகத்தின் மழக் கன்றும்
புலிப்புறமும்
உறங்கு இடனும் பொருந்திற்று
அம்மா"
[கிட்-நாட-28]

என்று பாடுகின்றார். இதில் கம்பன் காட்டுகின்ற முதல்வரி பிரபந்த வரி. பெரியாழ்வார் திருமொழியில் வருகிறது.

"தோதவத்தித் தூய்மறையோர் துறை"

என்ற வரியை அப்படியே தம் பாடலின் முதல் வரியைக் கையாள்கின்றார் ஆசிரியர்.

அதே போன்று பின்னரும் "வான மாதர் கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு வருடுதோறும் கிளக்கும் ஓதை" என்று கையாளுமிடத்திலும் பிரபந்தத்தையே அடியொற்றிச் செல்கின்றார். பெரியாழ்வார் திருமொழியில் "கின்னர மிதுனங்களும் தம் தம் கின்னரம் தொடுகிலோமென்றனரே" (3-6-5) என்று வரும் வார்த்தைகளை சற்று மாற்றிக் கையாள்கின்றார்.

வேங்கடமலையில் ஒலிக்கின்ற யாழோசையின் இனிமையைப் புலப்படுத்த யானைக் கன்றும், புலிக்குட்டியும் உறங்குதலைக் கூறினார். புலியும் யானையும் எப்போதும் பகைநோக்கு கொண்டனவாயினும் திருமலையில் ஒலிக்கின்ற யாழின் பெருமையால் அவைகள் தம் பகையை மறந்து ஒன்றாக உறங்குபவாயின என்று காட்டுகின்றார்.

எனவே கம்பன் காட்டுகின்ற வேங்கடமலை வடசொற்கும் தமிழ் சொற்கும் எல்லையாக அமைகின்றது. நான்கு வேதங்கட்கும் உறைவிடமாய் அமைந்து பெருமை கொள்ளத்தக்கது. இருவினையை நீக்கி பெரும் ஞானிகளின் உறைவிடமாக உள்ளது, எழில் சூழ்ந்தது, பகைமையை நீக்கவல்லது என்றெல்லாம் தம் நூலில் புகழ்ந்து பாடியுள்ளார்.

ஆழ்வார்களின் கருத்துக்களை அடியொற்றியே தாம் கண்ட திருமலையை எழிலாக நமக்குக் காட்டியுள்ளார்.

"ஊயும் மூப்புப் பிறப்பு இறப்புப் பிணி
வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து
ஆயன் நாண்மலராம் அடித் தாமரை
வாயுள்ளும் மனத்துள்ளும்
வைப்பார்சகட்கே
[திருவாய்மொழி 3-3-9]

என்ற திருவாய்மொழியின் கருத்தினைப் பொதுவாகத் தம் பாடல்களில் இழையோட விட்டுள்ளார். எனவே கம்பன் காட்டுகின்ற திருவேங்கடத்தான் "திருவடிகளைப் பிடித்தார், பிடித்தார் வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூரடே".

# உன் பெருமை ஆர் அறிவார்?

ஆழ்வார்கள் எம்பெருமானின் லீலா விநோதங்களில் ஆழ்ந்தவர்கள் ஆக இருக்கலாம். ஈசனின் பெருமைகளை நிறையப் பாடியவர்கள். ஆயினும், பரமனின் பெருமைகளைப் பூரணமாகப் புரிந்து கொண்டு, பாடி முடித்ததாக அவர்கள் எங்குமே பேசவில்லை. ஈசனின் மகிமையை எவர் முற்றும் அறிய வல்லார் எனத் திரும்பத் திரும்பக் கேட்டு, அதில் ஒரு மகிழ்ச்சி கொள்பவர்கள் அவர்கள்.

உணர்வார் ஆர் உன் பெருமை? ஊழி
தோறூழி
உணர்வார் ஆர்உன் உருவம் தன்னை?-
உணர்வார் ஆர்
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்!
வேங்கடத்தாய்!
பண்ணகத்தாய்! நீ கிடந்த பால்!

முதல் திருவந்தாதியில் இது ஒரு பாசுரம். வைகுந்த நாதனே, பூலோக நாதனே! வேங்கடமுடையானே! வேதங்களில் ஒளிரும் ஒப்பற்ற எம்பெருமானே - இவ்வாறெல்லாம் அழைத்து அழைத்து, அந்த ஈசனிடமே பொய்கையாழ்வார் கேட்கிறார்-உன் பெருமையை எவரே உணரவல்லவர்? எவர்தான் உன் பரிபூரண வடிவத்தை அறியக்கூடியவர்? நீ பாற்கடலில் பள்ளி கொண்டதன் உட்கருத்தைப் புரிந்துகொண்டவர் உண்டோ?

காலம் உள்ள அளவும் ஆராய்ந்தாலும், கண்டு கொள்ள முடியாத சிறப்புப் பெற்றவன் அல்லவோ நீ? ஊழி தோறூழி உணர்வார் ஆர்? காலம் கடந்து நிற்கும் கடவுளைக் காண வல்லார் எவர்?-இது 68-ம் பாசுரம். இதிலிருந்து 15 பாசுரம் கடந்து சென்றால், இதே போன்ற அனுபவம் நமக்குக் கிட்டும். உன் பெருமை ஆர் அறிவார் எனத் திரும்பக் கேட்பார் பொய்கையார் பரந்தாமனிடமே.

பிரான்!உன் பெருமை பிறர் ஆர்
அறிவார்?
உரா அ யுலகளந்த ஞான்று-வராகத்
தெயிற் றளவு போதாவா றென்
கொலோ எந்தை
அடிக்களவு போந்த அடி.

84-ம் பரசுரம், முதல் திருவந்தாதியில் இது. வராகமாகத் திருமால் அவதாரம் எடுத்த நாளத்துக் கதை இங்கே பேசப்படுகிறது. பூமியைத் தம் கொம்பினுல் மேலே தூக்கி எடுத்து வந்துவிட்டார் வராக சுவாமி. பின்னர் தம திருவடியினுல் அளந்தபோது, மண்ணும் விண்ணும் இரண்டே அடியினில் தங்கிவிட்டன. இந்த விநோதச் செயல்களைப் பிறர் எவர் அறியக்கூடும்? இவற்றிற்கு விளக்கமும் பரமனே தர வேண்டும். நமக்கெல்லாம் புரியும் விஷயமா இது?

இந்த வாமன அவதாரப் பேச்சு, முதல் ஆழ்வார் மூவர்க்கும் என்றுமே மிகவும் உவப்பான விஷயம். பூதத்தாரும் கேட்பார். இரண்டாம் திருவந்தாதி, 5-ம் பாசுரம்.

அடிமூன்றில் இவ்வுலகம் அன்றளந்
தாய் போலும்
அடிமூன்றிரந்தவனி கொண்டாய்-
படி நின்ற
நீரோத மேனி நெடுமாலே! நின்
அடியை
ஆரோத வல்லார் அறிந்து?

மூன்று அடியில் உலகத்தை அளக்கிறேன் எனத் தொடங்கி, அம்மூன்றே அடியில் பிரபஞ்சத்தையே ஆட்கொண்டாய்!

இப்பழம் நிகழ்ச்சியை வியப்புடன் நினைவு கூரும் ஆழ்வார், எம்பெருமானிடமே கேட்பார்; கார் வண்ண மேனி நெடுமாலே, அடியென்று ஏதோ கணக்கில் தொடங்கிய உன் திருவடி உலகினையே அளந்து அப்பால் ஒன்றும் எஞ்சியிராது செய்து விட்டதே. உன் அடியை எவர் புரிந்துகொள்ள முடியும்? அளவு கடந்த திருப்பாதம் அல்லவா அது? எவர் புரிந்துகொண்டு பேச முடியும்? ஆர் உணர்வார் என அவர் கேட்டார். ஆர் அறிவார் என்கிறார் இவர்.

திருமழிசையாரோ, இன்னும் சிறிது கூடுதலான அழுத்தத்துடன் கூறுவார், ஆரும் அறியார் அவன் பெருமை என்று.

' தேருங்கால் தேவன் ஒருவனே'
என்றுரைப்பர்
ஆரும் அறியார் அவன் பெருமை—
ஓரும்
பொருள் முடிவும் இத்தனையே
எத்தவம் செய்தார்க்கும்
அருள் முடிவ தாழியான் பால்.

---

திரு ர. வேங்கடரத்தினம்,.
நெய்வேலி.

---

இது நான்முகன் திருவந்தாதிப் பாசுரம் 2. இறுதியான, உறுதிப் பொருள் சாட்சாத் சக்ரபாணியே. பிரமாதமாகக் கற்றுத் தேர்ந்து, ஆராய்ந்து என்னென்னவோ அரிய தவமெல்லாம் செய்து, நிறைவாகக் காண்பது ஆழியான் திருவருளைத்தான். அவன் பெருமையை எவருமே அறிய முடியாது என உறுதியாகக் கூறும் ஆழ்வார், எவரேனும் ஈசனை அறிந்ததாகச் சொன்னுல், ஒப்புக் கொள்ள மாட்டார். ஆரும் அறியார் அவன் பெருமை என மறுத்ளிப்

பார். ஈசன் பெருமையும் ஏனையவர் சிறுமையும் இரண்டுமே இதில் அடக்கம்!

சடகோபர் ஈசனின் பெருமை தமக்கு இன்னும் விளங்கியபாடில்லை எனக் கூறிக் கொள்வதில் மிகப் பெருமை கொள்பவர். நானெல்லாம் சர்வேசுவரனைப் புரிந்து கொண்டதாகப் பேசிவிட முடியுமா? பாசுரம், திருவாய்மொழி முதறபத்தில். 'வள வேழ்' எனும் 5வது பத்துப் பாசுரத்தில், 7வதாக வருவது. எடுப்பே தம் சிறுமையைப் பறைசாற்றுவதாக அமைத்துள்ளார் சடகோபர்.

அடியேன் சிறிய ஞானத்தன்
அறிதல் ஆர்க்கும் அரியானை
கடிசேர் தண்ணந் துழாய்க் கண்ணி
புனைந்தான் தன்னைக் கண்ணனை
செடியார் ஆக்கை அடியாரைச்
சேர்தல் தீர்க்கும் திருமாலை
அடியேன் காண்பான் அலற்றுவன்
இதனில் மிக்கோர் அயர் வுண்டே?

நம்மாழ்வார்க்குப் பகவானின் பெருமையைப் பேசுகிற பேச்சோடு பேச்சாக, தம்மைக் குறைத்துக் கூறிக் கொள்வதிலும் ஒரு திருப்தி. அடியேன், சிறிய ஞானத்தன் என எடுத்த எடுப்பிலேயே கூறுவார். உடன், பரமனின் பெருமையை விண்டுரைப்பார். 'அறிதல் ஆர்க்கும் அரியான்.' ஏதோ என்னைப் போன்ற சிறிய ஞானத்தவர்க்குப் புரிந்து கொள்ள முடியாத அரியவன் அல்லன் ஆண்டவன். ஆர்க்குமே அரிது அவனை அறிவது!

நறுமண மிகுந்த, குளிர்ச்சியாக உள்ள துளசி தளமாலை அணிந்த கண்ண பெருமான், அடியவரைக் காளான் போல முளைத்து முளைத்து வருத்தும் வினைகளைத் தீர்க்கும் எம் பெருமான் என்னைப் போன்றவரின் கண்ணுக்கும் கருத்துக்கும் அகப்பட்டு விடுவாரா? நானெல்லாம் கடவுளைக் கண்டு கொண்டு விட்டதாக அட்டகாசம் செய்வதா?

திருச்சந்த விருத்தத்தில் சிறிது புரட்டினால், திருமழிசையார் பாசுரத்திற்குப் பாசுரம் இப்படியே கேட்டுக் கொண்டு செல்வார்.

நின்னை யார் நினைக்க வல்லரே?
நின்னை யாவர் காண வல்லரே?
நின்னை யார் மதிக்க வல்லர்?
உன் கருத்தை யாவர் காண வல்லர், கண்ணனே?
எங்கள் செங்கண் மாலை யாவர் காண வல்லரே?

இதெல்லாம் படித்துவிட்டபின், நமக்குப் பரந்தாமனின் பிடிபடாத அதிசயப் பெருமையில் முடிவிலாத ஈடுபாடு தோன்ற வேண்டும். நமக்கெல்லாம் புரியாதவர் என இறைவனிடமிருந்து ஒதுங்கிவிடக் கூடாது. ஆழ்வார்க்குள்ள பணிவும் பக்தியும் கொண்டு, நாம் தொடர்ந்து ஈசனின் மகிமையில் மனம் ஆர ஈடுபட வேண்டும்.

*

தெரிந்து கொள்ளுங்கள் .

## மந்திரங்கள்

மந்திரங்கள் ஏழு கோடி என்று சித்தர்கள் சொல்லுகிறார்கள். அவை மூன்று பிரிவாக உள்ளன. அவை பீஜ மந்திரம், பிண்ட மந்திரம், மாலா மந்திரம் என்பனவாம்.

**பீஜ மந்திரம் :**

மூன்று அட்சரங்களுக்குட்பட்டது. ஓம், ஐம், ஹ்ரீம், ஹூம், ஹரி, ராம, சிவ, குக, குரு என்பதுபோல் வருவன.

**பிண்ட மந்திரம் :**

இது மூன்று அட்சரங்களுக்கு மேலும் பத்து அட்சரங்களுக்குள்ளும் இருக்கும் மந்திரங்கள். இதை பீஜாட்சர மந்திரம் என்றும் கூறுவர்.உதாரணம். "ஓம் நமோநாராயணாய", "நவசிவாய", "ஓம் நமோ குருஸித்தாய" என்பனவாகும்.

**மாலா மந்திரம் :**

இது பத்து அட்சரங்களும் அதற்கு மேற்பட்டும் உள்ளதாக இருக்கும். இதை மஹாமந்திரம் என்றும் சொல்வார்கள்.

"ஓம் நமோ குருஸித்தாய
பரம புருஷாய
ஸர்வதேவதா வசீகரண ஸமர்தா ய
ஸர்வாரிஷ்ட விநாஸனாய
ஸர்வ மந்த்ர ஸ்வரூபாய
த்ரைலோக்யம் மே வசம் குரு ஸ்வாஹா"

இது ஸித்தகுரு மஹாமந்திரம். காயத்ரீ மந்திரங்கள், கீதை ஸ்லோக மந்திரங்கள் முதலியன இதற்கு உதாரணம் ஆகும்.

"ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே"

என்பது போன்ற நாமாவளிக்கும் மஹாமந்திரம் எனப் பெயர்.

இந்த மந்திரங்களை நான்கு வகையாகப் பிரித்து ஸித்தம், சாத்யம், ஸித்த சாத்தியம், அரி எனக் கூறுவர்.

மந்திரம் என்பது உபாசனா மூர்த்தியின் சக்தி வாய்ந்த பீஜாட்சர ஒலி வடிவமாகும்.

**கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.**

# வத்ஸலா கல்யாணம்

ஜனமேஜய மஹாராஜனுக்கு ஜைமினி மகரிஷி வத்ஸலை கல்யாணத்தைச் சொல்லுவதாக புராணத்தில் உள்ளது. குந்தி, சுபத்ரா, அபிமன்யு ஆகிய இவர்களைப் பாண்டவர்கள் ஹரித்வாரத்தில் விதுரர் வீட்டில் இருக்கச் செய்து, த்ரௌபதியுடன் காட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள். அந்த சமயம் துரியோதனன் சகுனியைப் பார்த்துக் கேட்கிறான்: "நம்முடைய யுக்தி ஒன்றும் பலிக்கவில்லையே, எவ்வளவோ சூழ்ச்சிகள் செய்தும் பாண்டவர்கள் சாகாமல் இருக்கிறார்களே. இதற்குக் காரணம் கிருஷ்ணன் அவர்களுக்குப் பக்கத் துணையாக இருப்பதுதான். அந்தக் கிருஷ்ணனை எப்படியாவது நம் பக்கத்தில் சேரும்படி செய்ய முடியாதா?". அதற்கு சகுனி பதில் சொன்னான்: "பலராமனுக்கு வத்ஸலை என்று ஒரு பெண் மகள் இருக்கிறாள். அந்தப் பெண்ணை உன் மகன் லக்ஷ்மணனுக்குக் கல்யாணம் பண்ணிவிட்டால் கண்ணன் நமக்கு சம்பந்தியாய் விடுவான். இதனால் நமக்கு எல்லாம் ஜெயமாகவே முடியும்" இது நல்ல உபாயம் என்று துரியோதனனும் மற்றும் அங்கு உள்ளவர்களும் ஆமோதிக்கவே கல்யாண நிச்சயம் செய்ய சகுனி துவாரகைக்குப் புறப்பட்டுப் போனான். துவாரகையில் பலராமனுடன் சகுனி கல்யாண வார்த்தைப் பேசினான். சகுனியின் வார்த்தையைப் கேட்டு பலராமனும் ரேவதியும் இந்த கல்யாணத்திற்குச் சம்மதம் தெரிவித்து விட்டார்கள். ஆனாலும் கண்ணனுடைய அபிப்ராயத்தையும் தெரிந்துகொள்ள விரும்பினார்கள். கண்ணனிடம் இந்தக் கல்யாணம் பற்றி அபிப்ராயத்தைப் பலராமன் கேட்டார். அதற்குக் கண்ணன் "முத்தண்ணா! சுபத்திரையின் புத்திரனை அபிமன்யுவிற்கு வத்ஸலையை கொடுப்பதாக ஏற்கெனவே சொல்லியிருந்ததை மறந்துவிட்டீரோ?" என்றான். அதற்கு பலராமன் "நான் மறக்கவில்லை. அப்போது பாண்டவர்கள் நல்ல நிலையில் இருந்தார்கள். அந்த நிலை தற்சமயம் மாறிவிட்டது" என்றார். அதற்கு மேல் கண்ணன் "அப்படியானால் சரி! தைவ ஸங்கல்பம் போல் நடக்கப் படும்" என்று சொல்லிவிட்டான். உடனே பலராமன் கல்யாண நிச்சயம் செய்து சகுனியிடம் லக்ன பத்திரிகையும் கையெழுத்திட்டுக் கொடுத்துவிட்டான். அந்த லக்ன பத்திரிகை துரியோதனனுக்குக் காட்டப்பட்டது. அந்த பத்திரிகை பீஷ்ம, துரோணர் மற்றும் உள்ள பெரியோர்களின் பார்வைக்கும் வந்தது. பெரியோர்கள் எல்லோரும் அதைப் பார்த்து "இதனை கிருஷ்ண பிரபு ஆமோதித்திருக்கமாட்டார். ஆகவே இந்த விவாஹம் நடைபெறாது" என்று சொல்லிக் கொண்டார்கள். இது ரகசியமான வார்த்தைகள்.

துரியோதனனும் அவனைச் சேர்ந்த உறவினர்களும், சிநேகிதர்களும் கல்யாணத்திற்காகத் துவாரகைக்குப் புறப்பட்டு விட்டார்கள். இது சமயம் துரியோதனனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அதாவது சுபத்ரையினாலும் அபிமன்யுவாலும் இந்த விவாஹத்திற்கு ஏதேனும் இடையூறு விளையக்கூடும். ஆகவே ஓர் உபாயம் செய்வோம். இந்த லக்ன பத்திரிகையை சுபத்ரைக்கு அனுப்பினால், அதைப் பார்த்து அவள் தாங்கமாட்டாத துக்கத்தை அடைந்து மூர்ச்சை அடைந்துவிடுவாள். உயிரையும் துறந்துவிடுவாள். அபிமன்யுவுக்கும் அதே கதியாகும். பிறகு விவாஹம் இடையூறு ஒன்றுமின்றி நடைபெறும் என்று துரியோதனன் நினைத்தான். இவன் நினைத்தபடியே செய்ய சுபத்ரை மூர்ச்சையடைந்துவிட்டாள். இதை அறிந்த அபிமன்யு வந்து தாயைத் தேற்றி "கண்ணனுடைய உதவியினால் வத்ஸலையை நானே மணந்து கொள்வேன்" என்றான். சுபத்ரை, குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஏறி தானே குதிரைகளை ஓட்டவும், அபிமன்யு ரதத்தில் ஏறி துவாரகைக்கு விரைந்து புறப்பட்டான்.

ரதம் செல்வதற்குக் காடுகள் இடையூறாக இருந்ததனால் அபிமன்யு தன்னுடைய அம்புகளால் காட்டை அழித்துக் கொண்டே சென்றான். அந்த காடு கடோத்கசனுடையது. பீமஸேனனுக்கு ஹிடிம்பியினிடம் பிறந்தவன் கடோத்கசன். கடோத்கசன் கோபம் கொண்டு அபிமன்யுவைக் கொன்றுவிட்டான். சுபத்ரை தன் மகன் மாண்டதற்காக அழுது கொண்டிருக்கையில் பகவானே பராசக்தி ரூபமாக வந்து தான் கொண்டு வந்திருந்த அம்ருத கலசத்தில் சுபத்ரையினுடைய இரு கைகளையும் வைக்கச் சொல்லி, ஒரு கையால் அபிமன்யுவைத் தடவிக் கொடுத்தால் அவன் பிழைத்து விடுவான் என்றும் மற்றொரு கையால் வேறு யாராவது இறந்தால் அவனையும் பிழைப்பிக்கலாம் என்றும் சொன்னார். அப்படியே அபிமன்யு பிழைத்து கடோத்கசனைக் கொன்றான். தன் மகன் மாண்டதற்காக ஹிடிம்பி பஞ்சபாண்டவர்கள் பேரைச் சொல்லி அலறினாள். அப்போது விசாரிக்கையில் கடோத்கசன் அபிமன்யுவுக்கு அண்ணனென்று தெரிந்து கொண்ட சுபத்ரை மற்றொரு கையால் அவனைத் தடவிக் கொடுத்து அவனையும் உயிர் மீட்டனள்.

திரு. வி. ரங்காசாரி — சீர்காழி.

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| டி. பி. சி. | | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹிட்டர் இல்லாதது) | | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | பெரியன | ரூ. 40/- |
| ,, ,, | சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூகாட் டேஜ் | | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடி பவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 15/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

நன்றியுள்ள கடோத்கசன் அபிமன்யுவுக்கு அவசியம் வத்ஸலையைத் தான் முன்னின்று மணம் செய்விப்பதாக வாக்குறுதி கூறினான். தன்னுடைய அஸுரகணங்களின் உதவியினால் துவாரகையிலிருந்த கல்யாணப் பந்தலை ரைவதககிரியில் கொண்டு சேர்த்துவிட்டான். அன்றியும், துரியோதனன் மனைவியான பானுமதியின் வேஷங்கொண்டு வத்ஸலைக்கு ஏதோ ஆடையாபரணங்கள் அணிவிக்க வேண்டுமென்கிற காரணத்தைக் காட்டி மணமகளான அவளையும் அழைத்து வந்து சுபத்ரையிடம் சேர்த்துவிட்டான். இதன் இடையில் இந்திர ஜாலத்தினால் ஒரு கடைத்தெருவை நிர்மாணம் செய்து அசுரர்களை எல்லாம் ஆடையாபாரணங்களாக வடிவெடுக்கச் செய்துவிட்டான். விவாஹத்திற்காக வந்திருந்த துரியோதன பரிவாரங்கள் இந்த மாயா வஸ்த்ரங்களை வாங்கி அணிந்து கொண்டன.

கடோத்கசன் வத்ஸலையாக வேஷம் பூண்டான். அந்த பொய் வத்ஸலையை சகுனிமாமா மாலை மாற்றுவதற்காகத் தன் தோளில் தூக்கிக் கொள்ள அந்தப் பெண் உண்மையில் கடோத்கசன் ஆகையால் பாரம் தாங்கமாட்டாமல் இடுப்பொடிந்து விழுந்துவிட்டான் சகுனி. துரியோதனன் மகனான மாப்பிள்ளை லக்ஷ்மணனுக்கு மணமகள் பெண் கருங்குரங்காகத் தென்பட்டதனால் அவன் இந்தக் கல்யாணம் வேண்டாமென்று அலறினான். இந்த சமயத்தில் துரியோதனாதிகளின் மாயா வஸ்த்திரங்கள் எல்லாம் பறந்துபோய் அனைவரும் நிர்வாணமாகி அவமானப்பட்டு அசுரர்களால் வெருட்டியோட்டப்பட்டார்கள். இதே தருணத்தில் கண்ணபிரான் முன்னின்று அந்த ரைவதககிரியிலேயே வத்ஸலைக்கு அபிமன்யுவுடன் விவாஹத்தைச் சிறப்பாக நடத்தி தந்தருளினான். ★

# தேசியத் திருவிழா தீபாவளித் திருநாள்

இமயம் முதல் குமரிவரை இந்திய மக்களால் பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்பெற்றுவரும் தேசியத் திருவிழா தீபாவளி. மொழி, இனம், கலாசாரம் போன்றவற்ருல் வேறுபட்டிருப்பினும் இந்தியாவில் வாழும் இந்து மதத்தவர் அனைவராலும் சிறு சிறு வேறுபாடுகளோடு தீபாவளிப் பண்டிகை மகிழ்வோடு, போற்றிக் கொண்டாடப் பெறுவதைக் காணலாம். இந்திய கலாசாரத்தின் சிறப்புக்கூறுகள், மக்கள் மேற்கொள்ளும் விரதங்களும் பக்தி சிரத்தையோடு அவர்கள் கொண்டாடும் பண்டிகைகளுமேயாகும். தீபாவளிப் பண்டிகை எப்போது எங்கே கொண்டாட்டமாக மலர்ந்தது என்பது பற்றியோ இப் பண்டிகைக்கு உண்மையான பின்னணி என்ன என்பது பற்றியோ தெளிவாக அறிந்து கொள்ள உரிய சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. தென்னுட்டுத் திராவிடப் பெருமக்களால் இப் பண்டிகை மிகப் பிற்காலத்தில்தான் மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். ஆயின் பல்வேறு இலக்கியச் சான்றுகள் தீபாவளிப்பண்டிகையின் தொன்மையை 1600 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் காட்டுகின்றன.

**யக்ஷராத்திரி :**

இதுவரைகிடைத்திருக்கும் சான்றுகளில் கி. பி. 400க்கு முற்பட்டவர் என்று கருதப்படும் வாத்ஸ்யாயனர் நூலில் தீபாவளியைப் பற்றிய முதற் குறிப்பினைக் காணமுடிகிறது. அந் நூல் தீபாவளிப்பண்டிகையை "யக்ஷ ராத்திரி" என்று குறிக்கின்றது. இது கார்த்திகைத் திங்கள் அமாவாசை அன்று இரவில் கொண்டாடப் பெறுவது. இதுவே ஆண்டின் கடைசி நாள். இதனைச் "சுகராத்திரி" என வழங்குதலும் உண்டு என வாத்ஸ்யாயனர் குறிப்பிடுகின்ருர். வடநாட்டில் விக்கிரம ஆண்டு என்ற ஒரு தொடராண்டு நிலவுகிறது. தீபாவளியின் மறுநாளையே விக்கிரம ஆண்டின் முதல் நாள் எனக்குறிக்கின்றனர். இன்று ஐப்பசித் திங்களில் அமாவாசை நாளில் தீபாவளி கொண்டாடப்பெறுதலை அறிவோம். கார்த்திகையில் நடைபெற்ற இவ்விழா ஐப்பசிக்கு எப்போது மாறியது என்பது பற்றி அறிய ஏதும் சான்று இல்லை.

**தீபமாலாவர்ணனம் :**

திருமணம் செய்து கொடுக்கப் பெற்ற தம் மகளையும் மருமகனையும் தம் இல்லத்திற்கு அழைத்துப் புத்தாடைகளை வழங்கும் திருநாளாகத் தீபாவளியை ஹர்ஷரின் (கி.பி. 606-648) "நாகாந்தா" என்ற நூல் குறிப்பிடுகின்றது. இந்நூல் தீபாவளியைத் "தீபப் பிரதிபதி உத்சவம்" எனப் பேசுவதைக் காணலாம். தலைத்தீபாவளிக்கு மாப்பிள்ளையை மகளோடு அழைத்து வந்து சிறப்பிக்கும் இன்றைய நிலை 1400 ஆண்டுகட்கு முற்பட்ட பழைய வழக்கே என்பதை ஸ்ரீ ஹர்ஷரின் நூலால் அறிகிருேம். கி.பி. 500க்கும் 800க்கும் இடைப்பட்ட காலத்தது என்று கருதத்தக்க காஷ்மீர நூல் ஒன்ருன "நீலமதபுராணு". இப்பண்டிகை கார்த்திகையில்தான் கொண்டாடப் பெற்றது என்பதை வலியுறுத்துகின்றது. தீபாவளியை இந்நூல் "கார்த்திக அமயம் தீபமாலா வர்ணனம்" என்று பேசுகின்றது. வீடுகள் தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றன. தீபங்கள் நிரல்பட ஏற்றப்பட்டன. மக்கள் புத்தாடைகளைப் பிராமணர்கள், நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கு வழங்கி அவர்களோடு கூடி விருந்துண்டு மகிழ்ந்தனர். பெண்கள் புதிய ஆபரணங்கள் பூண்டு, பாட்டுக்கள் பாடி நடனமும் ஆடி மகிழ்ந்தனர் என்றெல்லாம் இப்பண்டிகையைப் பற்றிய நடைமுறை அமைப்பினை இக்காஷ்மீர நூல் முதன் முதலாகத் தெளிவாக விவரிக்கிறது.

**தீபோத்சவம் :**

மகா நவராத்திரிக்குப் பின் வீடுகளுக்கு வெள்ளை அடிக்கப் பெற்று விளக்கேற்றி ஆடவரும், பெண்டிரும் மகிழ்ந்து கொண்டாடும் "தீபோத்ஸவம்" என்ற ஒரு பண்டிகை பற்றி கி.பி. 10ம் நூற்ருண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த "சோமதேவசூர்" என்பார் தமது "யக்ஷதிலகன்சம்பு" என்ற நூலில் குறித்துள்ளது தீபாவளியே என்பது தெளிவாகும்.

---

**குத்தாலம் பாலச்சந்திரன்**

---

**தீவாளி :**

கி.பி. 10ஆம் நூற்ருண்டுக்குப் பிற்பட்ட நூல்களில் தீபாவளி பற்றிய கேளிக்கைத் தன்மைகள் விவரிக்கப் படுவதோடு இப்பண்டிகையின் பின்னணியாகப் பல்வேறு தெய்வீகக் கோட்பாடுகளும் பேசப்படுகின்றன. ஸ்ரீபதியின் (கி. பி. 1030) ஜோதிஷ ரத்ன மாலாவில் இப்பண்டிகை பற்றிய குறிப்பு உண்டு. அல்பர்ணி தாம் எழுதிய தாகிக்-இ-இந்து (Enqu ry in India) என்ற நூலில் இப்பண்டிகையைத் "தீபாளி" (Dibali) என்று குறித்து தீப அலங்காரங்களோடு மக்கள் இந்நாட்களில் திருக்கோயில் வழிபாடு நிகழ்த்துவர் என்பதையும் குறிக்கிருர். குஜராத் மாநிலத்தைச் சார்ந்த ஹேமசந்த் (கி. பி. 1088-1172) தமது "தாரத்னமாலா" என்ற நூலில் தீபாவளிப் பண்டிகையை யக்ஷராத்திரி, ஜகராத்திரி என்று குறிப்பதோடு அமையாது

தீவாலி (Divali) என்றும் குறிக்கின்றூர். எனவே வாத்ஸ்யாயனர் குறித்த யக்ஷராத்திரியும், தீபாவளியும் ஒன்றே என்பதை இக்குறிப்பால் உணர முடிகிறது.

**எண்ணெய் ஸ்நானம் :**

தென் இந்தியாவில் தீபாவளி பற்றிய முதற்குறிப்பினை கி.பி. 1117-ல் வாழ்ந்திருந்த சாளுக்கிய திருபுவன மல்லனின் கன்னடக் கல்வெட்டு ஒன்றே வழங்குகின்றது. தமது அன்புக்குரிய சாத்யாயனர் என்ற அறிஞர்க்கு ஆண்டுதோறும் தீபாவளியில் இம்மன்னன் உயரிய பரிசுகளை வழங்கினுன் என்று இக்கல்வெட்டால் உணரப்படுகின்றது. மகாராஷ்டிரத்தில் வாழ்ந்திருந்த சிறந்த ஞானியாகிய ஞானேஷ்வரரின் (1290) ஞானேஸ்வரி என்ற நூலிலும் தீபாவளி பற்றிய குறிப்பு உண்டு. தீபாவளியன்று எண்ணெய் தேய்த்து நீராடுவது என்ற குறிப்பு மராத்தி நூல்" லீலாவதி " (1250)யில்தான் முதன் முதலாகப் பேசப்படுகின்றது.

**மகாலட்சுமி பூஜை :**

வடநாட்டில் மகாராஷ்டிரத்திலும் குஜராத்திலும் இன்றும் தீபாவளி பெருஞ் சிறப்போடு கொண்டாடப் பட்டு வருதல் நாம் அறிந்ததே. செல்வத்தை வழங்கும் மகாலட்சுமிக்குப் பூஜை செய்வித்துப் புத்தாண்டு தினமாகப் புதுக்கணக்கு எழுதி இப் பண்டிகையை வடநாட்டில் கொண்டாடுகின்றனர். 1305-ஐ ஒட்டி வாழ்ந்த பெத்துங்கா என்பவரின் "பிரபந்த சிந்தாமணி" என்ற இந் நூல் இந்நாளில் மகாலட்சுமிக்கு நகைகள் அணிவித்து வழிபடுதல் வழக்கம் என்பதை முதன் முதலாகக் குறிக்கின்றது. விஜய நகர ஆட்சிப் பற்றிக்கூறும் ஒரு நூலில்("ஆகாசபைரவகதா") இத்திருநாள் மன்னனின் வெற்றி மற்றும் செல்வவளம் குறித்து இரண்டு நாட்களுக்குக் கொண்டாடப்படுகிறது என்றும் மன்னன் இந்நாட்களில் ஸ்ரீ மகாலட்சுமிக்கு மூன்று விளக்குகள் ஏற்றி வழிபடுவான் என்றும் விவரிக்கக் காணலாம். அபுல்பசரின் "அயினி அக்பரி" என்ற நூல் இதனை வைசியர்களின் சிறந்த பண்டிகை என்று குறிக்கிறது. நரகாசுரன் என்பான் மக்களுக்கும், தேவர்களுக்கும் பெருந்துயர் விளைவித்தான் என்றும் திருமால் அவனைக் கொன்றூர் எனவும், இறக்கும் தருவாயில், திருமாலை நோக்கிச் சதுர்த்தசியாகிய இந்நாளில் எண்ணெய் முழுக்காடி, புத்தாடை உடுத்தி, திருமாலாகிய நின்னை வணங்குவோர்க்கு எல்லா நலங்களும் செழிக்க நீ அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான் என்றும் திருமாலும் அங்ஙனமே அருளினுர் எனவும் ஒரு கதை கேட்கப்படுகிறது. இதனை ஒட்டி ஐப்பசி தேய்பிறையின் பதினுன்காம் நாளினை நரக சதுர்த்தசி ஸ்நானம் எனவும் மறுநாள் அமாவாசை அன்று தீபாவளிப் பண்டிகை எனவும் கொண்டாடும் முறை தற்போது நிலவி வருகிறது.

**கார்த்திகை விளக்கீடு :**

தமிழ் நாட்டில் தீபாவளி பெருஞ் சிறப்பாக நடைபெற்று வருவதை அனைவரும் அறிவர். எண்ணெய் முழுக்கு, புத்தாடை அணிதல், பலகாரங்கள் செய்து உண்டல், மத்தாப்பு வெடிகள் கொளுத்தி மகிழ்தல் போன்றன தமிழ்நாட்டில் இல்லை. தீபாவளிக்குமாருக அடுத்து வரும் கார்த்திகைத் திங்கள் கார்த்திகை விண்மீனன்று தீபம் ஏற்றுதல் தமிழ் நாட்டில் வழக்கில் உள்ளது. வாத்ஸ்யாயனர் மற்றும் வடநாட்டு நூலாசிரியர்கள் தீபாவளி பற்றிய ஆரம்பகாலக் குறிப்புகள் இத்திரு நாள் கார்த்திகையில் கொண்டாடப் பெற்றதாகக் குறித்துள்ளமை கொண்டு நோக்கும் போழ்து கார்த்திகை விளக்கீடே தமிழகத்தில் பண்டைக் காலத்துத் தீபாவளித் திருநாளாக இருந்திருக்கலாமோ எனக் கருத இடமுள்ளது. சங்க இலக்கியத்திலும், ஞானசம்பந்தர் தேவாரத்திலும் கார்த்திகை விளக்கீடு பற்றிய குறிப்புக்கள் உண்டு. ஆனுல் தீபாவளி என்ற குறிப்பு அண்மைக்கால இலக்கியங்களிலும் கூட இடம்பெறவில்லை.

**இன்புற்று மகிழ்வோம் :**

எங்ஙனமாயினும் தீபாவளி மிகச் சிறப்பாக மகிழ்வோடு கொண்டாடப் பெற்று வருகின்றது. தீமை அகன்று நன்மை மலர்வதே விழாக்களின் நோக்கமாகும். இருள் கடிந்து ஒளிவெள்ளம் பரவும் குறிப்பே அறியாமை அகன்று அறிவு சிறத்தலின் அறிகுறியாகும். எனவே இறைவன் திருவருளை நினைந்து, புனித நீராடி புத்தாடை உடுத்தி, கூடியிருந்து விருந்தோம்பி எல்லோரும் இன்புற்று மகிழ்வோமாக.

## அபிஜித் முகூர்த்தம்

அபிஜித் முகூர்த்தம் என்பது பகல் 12 மணி. அந்த முகூர்த்தமானது எல்லா இடங்களிலும் முக்கியமானது. லக்கினத்திற்கு இருக்கும் தோஷங்களையும், நவக்ரஹ தோஷங்களையும் போக்கி வெற்றியைத் தரும் முகூர்த்தம். இதில் உபநயனம் கூடாது.

**கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.**

# நலம் நல்கும் நவராத்திரி

**ஆய கலைகள் அறுபத்தி நான்கினையும்**
**ஏய உணர்விக்கும் என்னம்மை-தூய**
**உருப்பளிங்கு போல்வாளென்**
**உள்ளத்தி னுள்ளே**
**இருப்பளிங்கு வாரா திடர்.**

பூவுலகின்கண் நடைபெறும் விழாக்கள் அனைத்தும் மகிழ்ச்சியான உள்ளத்தையும், ஒருமைப் பாட்டுணாவையும் வளர்க்கின்றன என்றால் அது மிகையாகாது. சந்திக்காத மக்களைச் சந்திக்கிறோம். விதவிதமான ஆடை அணிகலன்கள் அணிந்து வரக் காண்கிறோம். நாம் ஒருவருக்கொருவர் குடும்ப நலன்களை உசாவியறிந்து கொள்கிறோம். பரஸ்பரம் ஒருவர் மனதை ஒருவர் புரிந்து கொள்ளும் நிலை ஏற்படுகிறது. இன, மொழி வேற்றுமைகளை மறந்து பழகுகிறோம். ஆண்டுக்காண்டு விழாக்களைக் கொண்டாடும் போது முந்தைய ஆண்டு கொண்டாடியதன் விளைவாக குடும்பத்தில் ஏற்பட்ட நன்மைகளைப் பற்றிச் சிந்திக்கிறோம். செயல்படுவதில் ஆர்வம் காட்டுகிறோம். அந்த முறையில் நவராத்திரிப் பண்டிகையைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். அது பற்றி அறிவது அனைவர்க்கும் நலந்தரும் செய்தியாகும். நாடுய்ய வழியாகும்.

வாழ்வில் முன்னேற்றங்காண விரும்புபவர்கள் நவராத்திரி விழாவினை உற்சாகமாகக் கொண்டாட வேண்டும். ஊக்கத்தோடு செயல்பட வேண்டும். பராசக்தி 64 கலைகளின் அம்சமாக விளங்குகிறாள். ஒன்பது இரவுகள் நடைபெறும் பூஜையே நவராத்திரியாகும். பராசக்தி முதல் மூன்று நாட்களில் காளியாகவும், இடையில் உள்ள மூன்று நாட்களில் திருமகளாகவும், கடைசி மூன்று நாட்களில் சரசுவதியாக (வாணி)வும் வழிபாடு செய்யப்படுவதைக் காணலாம். நெய், சர்க்கரை, தேன் இவை அவசியமானவை. வில்வ இலைகள், சர்க்கரை கலந்த எள், செவ்வலரி மலர் இவை கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும் புரட்டாசித் திங்கள் சுக்கில பட்சத்தில் வரும் நவராத்திரியில் அஷ்டமியும் நவமியும் சிறந்தவையாகும். இது போன்றே சதுர்த்தசி திதியும் சிறப்பு வாய்ந்ததாகும். இந்த நாளில் திருமணமாகாத பெண்களுக்கு ஆடை, அணிகலன்கள் சந்தனம், குங்குமம், தைலம், மலர்கள் முதலியவற்றைக் கொடுத்து மகிழ வேண்டும். தேவி கீர்த்தனங்கள், தேவி பாகவதம் முதலியவற்றை முறையே பாடவும், படிக்கவும் வேண்டும்.

இவ்வாறு செய்கின்ற போது இம்மையில் பெற வேண்டிய சுகத்தை எளிதில் அடையலாம். ஆயுட் காலத்தின் இறுதியில் கிடைத்தற்கரிய வீடு பேற்றினை யடையலாம். அரிய செல்வங்கள் பலவும் பெறலாம். பகைவர்கள் நண்பர்களாவார்கள். இல்லறத்தில் மனைவி, மக்களிடையே மகிழ்ச்சி பொங்கும். வறியவன் வளமான செல்வத்தைப் பெற்றவனாவான். நோய் நொடியில் ஒடுங்கிக் கிடப்பவன் எழுந்து நடமாடுவான். கல்வியறிவில்லாதவன் தெளிவாக அறிந்து கொள்ளும் அறிஞனாக மாறுவான். இந்த நவராத்திரி விரதத்தை நடத்தினாலும், நடத்தத் தூண்டினாலும், விழாவில் கலந்து கொண்டாலும் சகல செல்வங்களும் பெறலாம்.

'மாதா பராசக்தி! நீ இல்லாத இடமில்லை. நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறாய். மக்கள் பார்க்கும் இடமெல்லாம், இருக்கும் இடமெல்லாம் என்று நிறைந்திருக்கிறாய். மக்களுக்கு ஆதார சக்தியாக நீதானே இருக்கின்றாய். எங்களுக்கு உன்னையன்றி, வேறு யார் இருக்கிறார்கள் இந்த உலகத்தில்? உயிர் போன்று எங்களைக் காக்கும் பராசக்தியே! ஏதாவது வழி நீ தான் சொல்ல வேண்டும். செய்ய வேண்டும்; வேதங்களுக்கெல்லாம் தாயாக விளங்குபவளே! உன்னைப் பணிந்து வாழ்வோம்' என்று பாரதி பாடுகின்றான். பாடலிதோ:

**மாதா பராசக்தி வையமெல்லாம் நீ**
**நிறைந்தாய்!**
**ஆதாரம் உன்னையல்லால் ஆரெமக்குப்**
**பாரினிலே?**
**ஏதாயினும் வழிநீ சொல்வாய்**
**எமதுயிரே!**
**வேதாவின் தாயே! மிகப் பணிந்து**
**வாழ்வோமே.**

**காளி:**

எண்ணிலாத பொருட்குவை தானளிப்பாள்; ஏற்றமும் ஆட்சியும் இனிதே நல்குவாள். ஆதவன் ஒளியும் அரும் பெருந்திண்மையும்; நிலவின் தன்மையும் நேரிய பாங்கும்; அன்னை காளி அளிப்பாள் மகிழ்வாய். பாரதி பாடுவான்:

**தானம் வேள்வி தவங்கல்வி யாவும்**
**தரணிமீதில் நிலைபெறச் செய்வேன்**
**வானம் மூன்று மழைதரச் செய்வேன்**
**மாறிலாத வளங்கள் கொடுப்பேன்**
**மானம், வீரியம் ஆண்மைநன்**
**னேர்மை**
**வண்மை யாவும் வழங்குறச்**
**செய்வேன்;**
**ஞானமோங்கி வளர்ந்திடச் செய்வேன்;**
**நான் விரும்பிய காளி தருவாள்.**

காளியை வணங்கிடக் கவலைகள் போகும். கோழையகன்று கூத்தாடும் வீரம்.

*வெண்பாவூர். பொ. திருஞானம்.*

**திருமகள் :**

செல்வத்திற்கதிபதி ஸ்ரீதேவி. மாலவனின் மனைவியவள். அழகொளி, சாந்தி, மனோகரி, அமைதி ஆகியவற்றின் வடிவமாக விளங்குபவள். சுவர்க்கத்தில் சுவர்க்க லட்சுமியாக இருப்பவள். இல்லறத்தார் வீடுகளில் கிருக லட்சுமியாக இருப்பவள். வைசியர்களிடம் தான்ய லட்சுமியாக விளங்குபவள்.

இவள் இல்லாவிட்டால் உலகில் எது நடக்கும்? ஒன்றுமே நடக்காது. பணம் இல்லாவிட்டால் பூனைபோல் பதுங்கிக் கிடப்பான். பணம் கைக்கு வந்து விட்டதென்றால் புலி போல் பாயக் கிளம்பி விடுவான். அதிர்ஷ்ட லட்சுமியின் கடைக்கண் வீச்சில் கிடைக்கும் மகிழ்ச்சியோ சொல்லுந் தரமன்று. பணம் இல்லையென்றால் தளர்ச்சி கிடைத்துவிட்டதென்றால் மகிழ்ச்சி. இதற்குத்தான் எத்துணை பெரிய மாட்சி? இப்படியிருக்கும் போது வழி படுவதிலே தவறென்ன? அதனால் பாரதி பாடுகின்றான்.

பொன்னரசி நாரணனார் தேவி,
புகழரசி
மின்னுநவ ரத்தினம்போல் மேனி
யழகுடையாள்
அன்னையவள் வையமெலாம் ஆதரிப்
பாள், ஸ்ரீதேவி
தன்னிரு பொற்றாளே சரண்புகுந்து
வாழ்வோமே
பொன்னரசி, நாரணனன் மனைவி,
இரத்தினம் போல்
மின்னும் மேனியழகுடையாள்
உலகத்தை ஆதரிப்பாள்
அவளின்றேல் அரசில்லை; ஆட்சி
யில்லை மாட்சிகூடக் கிடையாது

எனவே அவள் தாளைச் சரணடைவோம் என்கிறான் பாரதி.

**கல்விக்கதிபதி கலைமகள் :**

ஒருவன் வயதில் சிறியவராகயிருக்கலாம். ஆனால் அவன் பேச்சு அறிவாளியைப்போல் இருக்கும். ஒருவன் வயதில் பெரியவனாயிருக்கலாம். ஆனால் அவன் பேச்சு முட்டாளைப் போல் இருக்கும். ஒரே வீட்டில் ஆண் பெண் இருபாலாருக்குமே கல்வி கிட்டுகிறது. இதற்கெல்லாம் காரணம் கலைமகளே. கலை மகளின் அருள் இருந்தால் மட்டுமே கல்விச் செல்வத்தைப் பெற முடியும். அவளருள் இன்றேல் கல்விச் செல்வத்தைப் பெற இயலாது. ஆனால் இன்றைக்கு எப்படி இருக்கிறதென்றால் செலவு செய்தால்தான் கல்வி. முழு அளவில் கல்வியைப் பெற இயலாவிட்டாலும் சிறிதளவாவது பெற இயலுகிறது. அது போதாதா? அவளருளின்றேல் அது கிட்டுமா? ஒரு போதும் கிட்டாது. எனவே கலைமகளை (வாணி) வழிபடுவதில் பிழையுண்டோ? அவள் சொல், உணர்வு, கல்வி, மெய்யறிவு ஆகியவற்றின் நிலைக்களமாக விளங்குகிறாள். அது மட்டுமல்லாமல் சகல வித்தைகளின் வடிவமாகவும் இயங்கி வருகிறாள். வீணை, புத்தகம் தாங்கியபடிக் காட்சி தருவாள். சந்தனம், முல்லை, ஆம்பல் இவற்றிற்குச் சமமான நிறத்தினையுடையவள். திருமாலை இரத்தின மாலையால் வழிபடுவாள். இவளை வழிபடவில்லையானால் நடைப் பிணம் போல் திரிய வேண்டியதுதான். இவளை வழிபடாமல் வித்தை கற்றால் அதனால் கிடைக்கும் ஒளி கிடைக்காமல் போகும். இதனால் தான் பாரதி 'வாணியைச் சூழ்வோமே' என்று பாடுகின்றானோ?

வாணி கலைத்தெய்வம் மணிவாக்குத
விடுவாள்
ஆணி முத்தைப் போலே அறிவுமுத்து
மாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்ப
தெலாங் காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே
சூழ்வோமே.

கலைமகளின் பெருமையை, "விண்கண்ட தெய்வம் பல்கோடி உண்டேனும் விளிம்பில் உன்போல் கண் கண்ட தெய்வம் உண்டோ?" என்று குமர குருபரர் கூறுகின்றார். 'கேடில் விழுச் செல்வம் கல்வி' என்று இயம்புகிறார் வள்ளுவர். திருத்தக்கதேவர் இயற்றிய சீவக சிந்தாமணியில் அவள் பெயராலேயே 'நாமகள் இலம்பகம்' என்று ஒரு பகுதியே ஒதுக்கியுள்ளதை நாமறியலாம். இவளருள் பெற்றவர்களுள் கம்பர், குமரகுருபரர், ஒட்டக்கூத்தர், பாரதி, கவிமணி, பாரதிதாசன் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இசைத் துறையிலெடுத்துக் கொண்டால் தாள்ளபாக்கம் அன்னமாச்சார்யா, தியாகையர், முத்துசாமி தீட்சதர், சியாமா சாஸ்திரி, எம்.எஸ். சுப்புலட்சுமி போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவராவர். பட்டியல் போடலாம். கலைமகள் பூசையோடு ஆயுத பூசையும் செய்கிறோம். தொழிற் கல்வியும் இதன் ஒரு பிரிவே. வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களையும், கலைக் கல்விக்குத் தேவையான பொருட்களையும் வைத்து வழிபாடு செய்கிறோம். தொழிலகங்களும், கல்லூரி, கலாசாலை, பள்ளிக்கூடங்கள், மற்றுமுள்ள நிறுவனங்கள் எல்லாம் ஆயுத பூசையினைக் கொண்டாடுகின்றன. இவ்வாறு கொண்டாடுவதன் மூலம் ஆண்டுக்காண்டு தங்கள் நிறுவனங்களில் முன்னேற்றங்காணப்படுகிறது. வருவாய் பெருகுகிறது. வாழ்வில் உயர்கிறார்கள். வளம் பல காண்கிறார்கள்.

வெள்ளைத் தாமரைப்பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை இன்பம் குலவும் கவிதை
கூறும் பாவலர் உள்ளத்தில்
இருப்பாள்
உள்ளதாம் பொருள்தேடி உணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின்
றொளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத்துட் பொருளாவாள்

என்று வணங்கி விழாவினை நிறைவு செய்வாம். வேறெவர்க்கும் எளிதில் கிடைக்கா வீடுபேறடைவோம்.

வையகந் தன்னில் வாழ்வோர்
தாமே
ஒழுகி நடந்தால் உயர்ந்த பயனே!

★

# திருமலையில் பிரம்மோற்சவ வைபவம்

திருமலையில நடைபெறும் விழாக் களிலேயே தலை சிறநததும மிக வும புகழ்பெறறதுமாக விளஙகுவது பிரமமோறசவம தான வராஹ புராணததில் கூறி யுளளபடி திருமலை பெருமாளுக்கு இநத உற்சவததை பிரம்மதேவனே முதன முதலில் நடததியதால் இந்த உற்சவம அவா பெயராலேயே இன் றும் விளஙகி வருகிறது

சரிததிர குறிபபுகளின்படி கி. பி. 966-ம ஆண்டு வரை திருமலையில் ஒரேயொரு முறைதான பிரம்மோற் சவம நடைபெறறதாகத் தெரிய வரு கிறது பலலவ சாம்ராஜ்யத் தைச சேர்நத ராணி சாமவை எனபவா கி பி 966-ல வெளளியால் செயயபபடட போக ஸ்ரீனிவாசரின சிலையை திருமலைக கோவிலில நிறு வினர்

இதறகுப பிறகு புரடடாசி மாதத திலும முககோடடி த்வாதஸி காலத் திலும ஒவ்வொரு வருடமும இரணடு பிரமமோறசவஙகள நடதத சாமவை ராணி கோவிலுககு நனகொடைகள் கொடுததாா இதனபடி பததாம நூறறாண்டின இறுதியிலிருநதுதான திருமலையில முனனா குறிபபிடடபடி வருடததிறகு இரணடு பிரமமோற சவஙகள நடைபெற ஆரமபிததன

சாமவை ராணி திருவேஙகடத்தா னுககுப பல நகைகளையும ஆபரணங களையும அளிததாா பிரமமோற சவம போனற திருவிழாககளை நடதது வதறகாக நிறைய நனகொடைகளை யும செயதாா புரடடாசி மாதததில் போக ஸ்ரீனிவாசரின சிலையை ஒனபது நாடகள திருஉலா அழைததுவர ஏற பாடு செயயபபடடிருநதது அதே போல முககோடடி தவாதஸியின போதும காலை மாலை இரணடு வேளை களிலும் போக ஸ்ரீனிவாசர் திருஉலா



எடுத்துச் செலலபபடடார் இததிரு விழாககளை நடதத ஆகும செலவு களுககாகப் பல நிலஙகளைக கோவி லுககு எழுதி வைத்தாா கோவில ஸதானததாரிடம இநநிலஙகளுககு வரிவிலககும அளிககபபடடிருநதது.

திருமலைக் கோவிலிலுளள சோழர் காலதது கல்வெடடுகள எதிலும பிரமமோறசவம பறறி எநதவித மான குறிபபும இலலை ஆனால பொதுவாக அசசமயம மிக அதிக மான எணணிககையில திருவிழாக களும, உறசவஙகளும நடைபெறறு வநததை மடடும அறிவிககிறது

சிறறரசாகளான கநத கோபாலா கள, யாதவராயாகள, கடவராயா கள, சமபுவாரியாகள முதலியவாகள திருமலைக கோவிலில நிதய தீப தூபம, நிதய நைவேதயம, உறசவங கள முதலியவறறை நடதத பல நன கொடைகள செயதுள்ளனா. கல் வெடடுக குறிபபுகளினபடி பதிமூன் றாம நூறறாணடின ஆரமபத்தி லிருநது மூனறாவதாக மேலும ஒரு பிரமமோறசவம நடைபெற ஆரமபிததது

சாமவை ராணியால புரடடாசி யிலும் மாாகழியிலும நடைபெற்று வநத இரணடு பிரமமோறசவங களுடன் மூனறாவதாக ஆடி மாதத் திலும ஒரு பிரமமோறசவம நடை பெற ஆரமபிததது இதை ஆரம் பிதது வைதத வீர நரசிமம யாதவ ராயனின ராணி, பைநதபளளி என்ற கிராமததில சரி பாதியை கோவி லுககுக் கொடுததாா இககிராமத் தின மறறொரு பாதி அதறகு முன் னரே கோவிலுககுக கொடுககபபடடு விடடிருநதது

இததுடன மரததாலான ஒரு ரதத் தினையும செயது அதை அலஙகரித்துப் பெருமாளை பவனி வரச செயவதற் கான செலவுகளையும அவரே ஏறறார். இபபடியாக பதினைகாம நூறறாண் டில் ‘திருககொடித திருநாள’ அல லது ‘பிரமமோறசவம’ ஒவவொரு வருடமும மூனறுமுறை நடைபெற்று வந்தது திருபபதியில இரண்டு முறை நடைபெறறது

இரணடாம ஹரிஹரனின காலத் தில மாசி மாதததில முலலை திரு வேஙகடே ஜீயா மூலம ஒரு புதிய உறசவம நடைபெற ஆரமபித்தது. இதறகான செலவுகளை அரசன் அளிதத பூஙகோடு கிராமததின்வரவி லிருநது உபயோகபபடுததபபடடது நாளடைவில பதினாறாம நூற்றாண்டின் நடுவில் வருடததிறகு பதது உற்சவங் கள நடைபெறறன வைகாசி, ஆனி மாதம தவிர ஒவவொரு மாதமும் குறைநத படசம ஓா உறசவமாவது நடநதது.


திரு. T S. திருவேங்கடம்,
திருபபதி.



திருமலை ஆனந்த விமான நிலையம்
திருமதி கமலா மாரியப்பன் - கோவை

பிரம்மோத்சவம் பன்னிரண்டு நாட்கள் கொண்டாடப்பட்டன முதல் நாள் அங்குரார்ப்பணம். ஒவ்வொரு நாளும் உற்சவ மூர்த்தியின் திருஉலா முடிந்ததும் கோவில் மண்டபத்தில் விசேஷ நைவேத்யம் நடைபெற்றது திரு உலாவின்போது கோவிலைச் சுற்றி புள்ள மலர்ச் சோலைகளின் உரிமை யாளர்களும் அவரவர் மண்டபங் களில் விசேஷ நைவேத்யங்கள் செய் தனர்.

19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் திருமலையில் வருடத்திற்கு நான்கு பிரம்மோத்சவங்கள் கூட நடந்த துண்டு முதலில் புரட்டாசி மாதம், இரண்டாவதாக ரத சப்தமியின் போது, மூன்றாவது கௌசிக ஏகா தசி அன்றும்,நாலாவதாக வைகுண்ட ஏகாதசி அன்றும் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வந்தன இரண்டாவது உற்சவம்'அர்ஷ உற்சவம்', மூன்றாவது 'ராக்ஷஸ உற்சவம்' எனக் கருதப்படு கிறது. இந்த நான்கில் புரட்டாசி மாதம் நடைபெறும் பிரம்மோத் சவம்தான் மிகவும் விசேஷமானது. 'ஸ்ராவண நட்சத்திரம்' என்று தொடங்கும் இந்த பிரம்மோற்சவம் இன்றும் கூட நடைபெற்று வருகிறது.

ஸ்ராவண நட்சத்திரத்திற்கு முதல் நாளன்று 'அங்குரார்ப்பணம்' என்று நவதானியங்கள் புதிய மண் பான் டங்களில் விதைக்கப்படும் யாக சாலையில் 'பூர்ண கும்பம்' நிறுவப் படும்

பிரம்மோற்சவம்,கருடா பொறித்த கொடி ஏற்றப்படும் 'த்வஜாரோ ஹணம்' அன்றிலிருந்துதான் ஆரம்ப மாகிறது உற்சவமூர்த்தி ஸ்ரீதேவி பூதேவி சமேதராய் காலை, மாலை, இரண்டு வேளையிலும் ஒவ்வொரு வாகனத்தில் திருஉலா கொள்வார்

ஐந்தாம் நாள் கருட வாஹனமும், எட்டாம் நாள் அஸ்வ வாஹனமும் பதினோரும் நாளும் விசேஷமானவை. கருட சேவை அல்லது கருடோத் ஸவம் அன்று உற்சவரை மட்டும் தான் திருஉலா எடுத்து வருவார்கள். (ஸ்ரீ தேவி பூதேவிக்கு அன்று ஊர் வலம் கிடையாது) உற்சவருக்கு அன்று ஊஞ்சல் சேவையும் நடை பெறும்.

பிரம்மோற்சவத்தின் எட்டாம் நாளன்று தேர்த்திருவிழா பக்தர் கள் கூட்டம் அன்று கடலெனத் திரண்டு வரும் உற்சவர் ஸ்ரீ தேவி பூதேவி சமேதராய் அலங்கரிக்கப் பட்ட தேரில் பவனி வருவார் பதி னோராம் நாளன்று உற்சவரை திருச்சி வாகனத்தில் எழுந்தருளச் செய்து கோவில் திருக்குளமான 'ஸ்வாமி புஷ் கரிணிக்கு' எடுத்துவரப்படுவார். திரு மாலின் 'ஸ்ரீசக்ரத்திற்கு' ஸ்வாமிபுஷ் கரிணியில் திருமுழுக்கு நடைபெறும் அதே சமயம் ஆயிரக்கணக்கான பக்த கோடிகளும் புஷ்கரிணியில் நீராடிப் புனிதமடைவார்கள் இத்துடன் திருமலையில் பிரம்மோற்சவ வைபவம் நிறைவு பெறும்

தற்சமயம் திருமலையில் ஒரு பிரம மோற்சவமே கொண்டாடப்பட்டு வருகின்றது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை அதிக மாதம் வருவதால், அவ்வாண்டு இரண்டு பிரம்மோத் சவங்கள் நடைபெறும். இவ்வகையில் பிரம்மோற்சவம் இவ்வாண்டு4-10-86 முதல் 12-10-86 வரை கொண்டா டப்படும்



திருமலை ஸ்ரீ வராகஸ்வாமி கோயிலில் ஸ்ரீ வேங்கடேஸ்வரஸ்வாமி

# ★ மஹா தேசிகன் கண்ட திருமலை ★

ஸ்ரீவைஷ்ணவ ஆசசார்யர்களில் மிக சிரேஷ்டரான கவிதா கேசரி மஹா தேசிகன, ஸ்ரீனிவாசப பெருமாள கோயில கொணடிருககும திருமலையை "கண்ணனடியினை எமககுக காட்டும வெறபு" எனற பாசுரத்தால மங்களாசாசனம செயது வைததாா இபபாசுரத்தில் இருக்கும ஆததம வேதங்களுககும, வேததின மறு உருவில இருககும திருமலைககும பொருத்தம உளள தெனபதை கீழககண்டவாறு அறியலாம

மேறகூறிய பாசுரம கீழே கொடுக்கபபட்டுளளது

கண்ணனடியினை யெமககுக் காட்டும
வெறபு
கடுவினையிரு வினையுங்கடியும வெறபு
திணணமிது வீடென்னத் திகழும
வெற்பு
தெளிந்த பெருந்தீர்த்தங்கள்
செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும
வெறபு
பொனனுலகிற போகமெலாம
புணர்க்கும வெறபு
விண்ணவரும மண்ணவரும விரும
பும் வெற்பு
வேங்கட வெறபன விளங்கும வேத
வெறபே!

"கணணன் அடியினை எமககுக காட்டும வெறபு — திருமலையைத தரிசனம செயகினறவாகள கண்ணன திருவடிகளை அடைவாாகள அமமாதிரியே எமபெருமான ஸ்ரீமந நாராயணன திருவடியை வேதபபிரமாணததால் அறியலாம எனகிறாா கவிதா கேசரி.

"கடுவினையிரு வினையுஙகடியும வெறபு" — திருமலையை நினைபபதாலும, ஸமரணம செயவதாலும, தரிசிபபதாலும பாபஙகள மறைகினறன அமமாதிரியே வேதம தனனை உசசரிபபவாகளுடைய, வேதம ஓதுவதை கேடபவாகளுடைய பாபஙகளை நீககுகினறது

"திண்ணமிது வீடெனனத திகழும வெறபு" — மோக்ஷ ரூபத்தை உடையது திருமலை எனறு சுவாமி தேசிகன அனுபவிபபதை இங்குக் காணலாம மநதர ரூபததிலும யகஞ ரூபததிலும தோனறியிருககினறாா திருமலை பகவான பகவானைப போலவேதான வேதமும் ஞானானந்த ஸவரூபியாய இருககினறது

"தெளிந்த பெருநதீாததஙகள செறிநத வெறபு" — திருமலையில புண்ணிய தீாததஙகள பல இருபபதால இவவாறு கூறுகிறார் ஸ்ரீதேசிகன ஆகாசகஙகை, பாபவிநாசம, புஷகரணி முதலிய புணணிய தீாததஙகளை உடைததாயிருககினறது இததிருமலை. அமமாதிரியே வேதத்தில பல புண்ணிய தீாத்தஙகள அடங்கியிருபபதாகக கூறபபடுகினறன கஙகா நதி போனற புண்ணிய நதிகளின விருததாநதஙகளை வேதம கணிககினறது

"புணணியததின புகலிதெனப புகழும வெறபு" — புணணியஙகள பல வகைபபடும அவை தனது சகதிககுத் தகுநதவாறு பலனைத தரவலலது திருமலை எலலாவித புண்ணியஙகளின பலாபலனையும தரும சகதி படைததுளளதாயிருககினறது அதுபோலவே வேத பாராயணத்தின மூலமாக எலலா புண்ணியங்களின பலனை அடையலாம எனகிறாா மகாதேசிகன

"பொனனுலகிற போகமெலலாம புணாககும வெறபு" — வைகுண்டமெனனும சுவாகக லோகத்தில ஜீவாதமா பல போகஙகளை அனுபவிககிறது அநத போகஙகள இந்த நில உலகததில எஙகுக கிடைககும்? கிடைககும இடம ஒரே இடமதான. அதுவேதான திருமலை வேதத்தில் கூறபபட்ட நறகாமாககளைச செயது இவவுலகததில எலலா போகஙகளையும திருமலையில அடையலாம் என்கிறாா கவிதா கேசரி

"விணணவரும மண்ணவரும விருமபும வெறபு" — திருமலையின மூலமாக தஙகள இஷடஙகளையும, மனோரதஙகளையும பெற தேவர்களும மனிதாகளும நினைககினறனர் அவவிதமே மேறகூறிய இருவகைப பட்டவாகளும வேததத்தை விருமபுகினறனா வேதத்தை சார்நதே நிறகினறனா

"வேஙகட வெறபன விளஙகும வேத வெறபே" — இங்கு வேதம தான திருவேஙகடமுடையான் திருவேஙகடமுடையானதான் வேதம எனறு சுவாமி தேசிகன் கூறுகினறார் திருமலையை வேதத்தின மறுரூபம அலலது மறுபிறபபு எனறு விளககுகினறாா ஸ்ரீதேசிகன இந்த ரூபமே பகவானுககு இருபபிடமாகக் கிடைததுள்ளது

வேதாந்த தேசிககுரோ வாங்மாநஸ
வாஸிநே |
ஸர்வ லோக நிவாசாய ஸ்ரீநிவாசாய
மங்களம் ||

*

திரு எம. கே ஸ்ரீனிவாசன் பி ஏ,
சென்னை-39.

# திருவேங்கட நவமணிமாலை

திரு வா ர ஸ்ரீனிவாசராகவன் M SC, - குரோமபேடடை 44

இருவிகறப மறாலை வெண்பா

கலியினில நினறிடும கணகணட தெயவம
கலிதீாககும வேஙகட நாதன — வலிமையை
வாழவினில தநதிடுவான வணண மலரடி
தாழநதெழு வோாகள தமககு

பதினறுசீா கழிநெடிலடியாசிரிய விருத்தம

அறவன கோபம அதிலநின மார்பினை
அவனறன அடிகள அவச ரமாயததொட
அவைநொ நதனவோ? எனவா யலாந்துபின
அவனடிமலா எனவே வருடினே!
உறவினிறைதம உளமகல தவம
உயாததியகாலை உவநதமுதூறறிய
உநதியுதிததோன இனனலைதநதவோர்
காவலனே உறவாயருளினே
வெறபில நாரணறகொரு
தனிசீா கோவில நாடடிய நாயகன
நெடுஙகோததிதனைப பொருத நேரலர்
நசிய சஙகு நேமி தநதனை
பிறவிப பிணிகள போககும வேஙகடப
பேருளோயயிப பூதலததினில
பொனருக கருணைப பெருஞசுடரே எமின்
பாவ வினைகள பழுதுபடஅருள்

கடடளைக் கலித்துறை

தமககிரும சுறறமெல்லாம நாரணன மடடுமே
எனனுஞ்சொல
தமதுளளம சோததார் திருமலைநாதனதாள செனனி
சோததாா
அமலனருளுககே ஆளாவாா ஆலிநீர் சூழுலகில
விமலமாய வாழவெயதி விணணவாககும மேலாய
வாழவரே

எண்சீர் கழிநெடிலாசிரிய விருத்தம

ஆளானம அதனினடி ஆககதமவாய
அடைபடட துயரததால ஆறு தனறு
மாளாதுன நாமததை மனறியககால
மீணடஙகுன ஆழியினல துயரெ டுதத
ஆளரியே! அணிவேஙக டமலை யபபா!
அவனிதனில கலிவிரிதத அவதி யிலயாம
ஆளானோம அலலலுறறோம அகவிடுககண்
அழிததாழ இநநாளில அருள வேணடும

கடடளைக் கலிபபா

அமுதாய நஞசினை ஊடடிட வநததோர்
அரக்கி ஆககையும ஆவியும வாஙகினன
அமரர் கோன்றனின் கார்முகில நீரிடை
அசலம தூககினன ஆணவம போனது
குமுதப பாதமிரணடினைத தூககியோா
அரவமமேலநடம ஆடினன பலவிதச்
சுமைகள சூழநதெமைச சோநதிடா வண்ணமாய
சயிலம மேலிரும வேஙகடத தெயவமே

அறுசீா கழிநெடிலாசிரிய விருத்தம

மறைநாலும மகிழநதே ஏததும
மாதவனை மாதவததால
உறைநதிடட சிறுவன கணடான,
உயாநதான விணணில வான மீதை
இறையுற்றோம சீரிலலாத தீச
செயகையினில உழனறோம வாழவில
நிறைகொணடோம பினநின பாதம
நாடுதலே விடிவா மெனறு

வெண் கலிபபா

புவியினிலநின உருபபறறிப பலநவினறு திரிகின்றோர்
தவிததிடுவார் உணமையுரு தாமகணடால
அவாகண்கள்
மணமலையில உலகாளும மாமணியே! திருமலையின
தன் பொழிலே! தரிததிடுவீா திகிரியொடு
சஙகினையும
விண்ணபபம செயதமுனி வனினசொலலில
இசைநதிடட
கண்ணனினசீாக கழலகளினைக கதியெனறு
மனமமைத்தார்
அல்லவைகள கருகிபபோய அவாகளினயிப
புவிவாழவில
நல்லவைகள நிதமபெருகும

எழுசீா ஆசிரிய சந்த விருததம

பிரமன செயத திருவிழவினில பவனிவநது
மகிழந்தமால்
அருநதவததுச சிறுமுனிககு அருளளிததுத
திகழநதமால்
உரமிகுதத அரசனதநத உறைவிடததில
நெகிழநதமால்
பரவுகினற அடியவாககுப புகழளிககும நெடியமால்

கலிவிருத்தம

சஙகமும ஆழியும சோநத புயத்தினல்
பஙகயம புகுநதநற பாாவைப பெருககினல்
பொஙகிடும சுடரொளிப பொனனின பததினல்
எஙகிலும அருளுவான ஏழு மலையனே ★



முததாடையில ஸ்ரீ வேஙகடேஸ்வரர்

# திருமலை

சமீபததில சூடாமணிககவிஞா ஸ்ரீ வேமபததூா கிருஷ்ணன அவாகள சுடர்மணிப பதிபபகததாா மூலம வெளியிடடுள்ள சூடாமணிமாலை எனற புததகததில, திருபபதி மலை வரலாறு ஒன்றைத தொகுதது வெளியிட்டிருநதார் படிககப படிககச சுவையான பல விஷயஙகள அதில அடஙகியிருபபதைக கண்ட நான விவரிகக இயலாத ஒரு திவய அனுபூதியைப பெறறேன யான பெறற அநத சுவையை ஸபதகிரி வாசகாகளும பெறடடுமே எனற எண்ணததிலும ஒரு விளககிலிருநது இனனொரு விளககை ஏறறினால ஒளிகூடுமே எனற நோககிலும அதைத தொகுதது அனுபபுகின்றேன

செடியாய வலவினைகள தீர்ககும திருமாலே
நெடியானே வேஙகடவா நின கோயிலின வாசல
அடியாரும வானவரும அரமபையரும கிடநதியஙகும
படியாகக கிடநது உன பவளவாய காண்பேனே

அகில உலகஙகளையும காதது ரடசிககும ஸ்ரீமந நாராயணன, கிருத யுகததிலே மசச, கூாம, வராக, நரசிமம, வாமனாகளாகவும, திரேதா யுகததிலே பரசுராம, ஸ்ரீராமாகளாகவும, துவாபர யுகததிலே பலராம, ஸ்ரீ கிருஷ்ணாகளாகவும, சுமாா ஆறு ஆயிரம ஆண்டுகளாக நடைபெறும கலியுகததிலே "ஸபதகிரி" (ஏழுமலை) களில ஸ்ரீவேஙகடாசலபதியாகவும எழுநதருளியுள்ளாா

மஹா விஷ்ணுவே வராகமாக வநது பூமாதேவியை மீடடதால வராககிரி விருஷபாசுரனை பகவான ஆட்கொண்டு பேரருள புரிநததால விருஷபகிரி அஞசனா தேவியானவள மாதவம செயது ஆஞசநேயரைப பெறறதால அஞசனகிரி. ஆதிசேஷனே திருமலையாகி ஸ்ரீநிவாசனைத தாஙகுவதால சேஷகிரி பாவங்களை எரிககும மகதததுவததால வேஙகடகிரி வேம(பாவம) கடம (எரிதல) ஜகத ரடசகனை ஸ்ரீமந நாராயணன தாமே வநது கோயில கொண்டதால நாராயணகிரி, லோக க்ஷேமததிறகாக யாகம செயயும ஞான ரிஷிகளின இருபபிடமானதால ஞானகிரி

மேறபடியான ஏழுமலைகளின மேல வாழும ஸ்ரீவேஙகடாசலபதியின பெருமைகளை 18 புராணஙகளுள 12-ல காணலாம் (திருமலாதரி, தாமாதரி, வேதாதரி எனறு பறபல பெயாகள ஏழுமலைககு)

ஸ்ரீ கிருஷ்ணாவதாரததின முடிவிலே, ஸ்ரீநிவாசனின திருஉருவம ஏறபடடு ஏழுமலைகளின மேலே ஸ்தாபிதமானதாகவும, ஒரு சில ஆயிர வருடஙகளுககு முனபுவரை பிரமமாதி தேவாகளால மடடுமே ஏழுமலையான பூஜிககபபடடதாகவும் ஓா ஐதிகம உண்டு "வேஙகடமே விண்ணோா தொழுவதுவும, மெயமையால வேஙகடமே மெயவினை நோய தீாபபதும, வேஙகடமே" எனபார் திருமழிசையாழவாா

தறகால வரலாறறு அறிஞர்களின் குறிபபினபடியே பாாததாலும் பாரதப போா நடநத காலம கி. மு 3102 மகாபாரத அாஜுனன "அரவககிரி" (சேஷாசலம) வநது தீாதத மாடியதாக மகாபாரதம கூறுகின்றது கி. மு 2-ம நூறறாண்டிலிருநது திருபபதி மகததுவம நாடெங்கும பரவலாகப பேசபபடடிருககிறது கி பி முதல நூறறாண்டு முதல மானிடரின போககுவரதது திருமலையில துவஙகியிருககிறது 2-ம நூறறாண்டு சஙக இலககணமான தொலகாபபியம, இலககியஙகளான பரிபாடல, அகநானூறு, எடடுததொகை முதலானவறறில திருபபதிச சிறபபுகள இடம பெறறுள்ளன மேறபடி நூறறாண்டின பிறபகுதி இலககியமான சிலபபதிகாரததில, சேர நாடடிலிருநது திருபபதிககு யாததீரிகாகள போனதாகக குறிபபு உள்ளது மேறபடிக காலக கடடததில திருபபதி மலைபபகுதியை "புலலி திரையன" எனனும வடுகாகள பரமபரையினா ஆண்டனா சோழ மனனாகள அவர்களை வெனறு அபபகுதியைக கைபபறறியிருககிறாாகள

வேஙகடாசல புராணததில வரும சநதிரகிரி சோழ மனனரில் தொடஙகி, சுதாமன, ஆகாச ராஜன எனறு வளாநது, தொண்டைமான சககரவாததியால திருமலை ஆலயம உருவாகி இருககிறது

புராண கால மேறபடி தொண்டைமானை அடுதது சோழ பரமபரையில் வநத தொண்டைமான இளநதிரை

*தொகுத்தனுப்பியவர்*
திரு எஸ் சநதிரமௌலி—திருபபதி



திருமலைக் கோயில்

யன்(2-ம் நூற்றுண்டு )இபபகுதியைத் "தொண்டைமண்டலம்" எனற பெய ரோடு 24 கோட்டஙகளாகப பிரிதது ஆண்டிருககிருன அதில ஒரு கோட டம திருவேஙகடக கோட்டமாகும் 3-ம நூறருண்டிலே தொகுககப பெறற வாலமீகி இராமாயணததில திருவேஙகடம புகழ பாடபபட்டிருக கிறது 4-5, நூறருண்டுகளில தமிழ நாட்டின பெரும் பகுதியோடு, தொண்டை மண்டலமும பகதி -ணாவே இலலாத "களபபிரா" ானற முரட்டு இனத்தவரால் ஆளப ட்டு நாடெஙகும அறநெறிகளும, ஆலய வழிபாடுகளும் ஸதம்பித்துப போயிருக்கின்றன மேற்படி கால கட்டஙகளில பிரமவாதம், ஆசீவ கம, நிகண்டம, சாஙகியம், வைசேடி கம், லோகாயதம முதலான பல மதககலவரஙகளாலும, சமண, பௌத்த மதஙகளின ஆவேச வளர்ச்சி யாலும, சைவ வைணவ பகதி நெறி கள சகதியிழநது கிடந்திருக்கின்றன. (72 துாமதங்கள பாரதமெங்கிலும் இருநததாக ஆதிசங்கரர் பிற்காலத் தில குறிபபிடுகிறுர் )

கி பி 6-ம நூற்றுண்டு :

சைவ வைணவஙகளைக் கண்களாகப பேணிய பல்லவ மன்னாகளின நல லாட்சிக காலம பன்னிரு ஆழவார் கள(கி பி 6 முதல 9 முடிய)108 திவய தேச மூாததிகளுககான நாலாயிர திவய பிரபநதததைப பாடியருளினுர் கள 12 ஆழவாாகளுள 10 போ திருப பதி வெஙகடாசலபதியை மட்டும 213 பாசுரஙகளால மஙகளா சாஸ னம் செயதுளளனா

வைணவ ஆசாாய பரமபரையான நாதமுனிகள, உயயக கொண்டாா, மணக்கால நமபி, ஆளவநதாா, பெரிய நமபி, எமபார், பராசரபட்டா, நஞசீயா, நமபிளளை, வடககுத திருவீதிப பிளளை, பெரிய வாச்சான பிளளை, பிளளை லோகாச சாாயா, திருவாய மொழிப பிளளை, மணவாள மாமுனிகள, பிளளான, கிடாமபி ஆசசான, எஙகளாழவான, நடாதூரமமாள, அபபுளளா ஆகி யோருடன இறையருட செலவர் களான திருமூலர், கபிலதேவர், கொங்கணா, கமபா, அருணகிரி, அகோபில வணசடகோபஜீயா, பெரிய திருமலாசசாா, ஸ்ரீமந நிகமாந்த மஹா தேசிகன, ராயசம வேஙகட பதி, சிவபரகாச ஸவாமிகள, சைவ எல்லபப நாவலா, புரநதர தாஸா, பிளளைப பெருமாள அயயஙகாா, க்ஷேத்திரயயா, பகத இராமதாஸா, தியாகப பிரமமம, முதலான பல மஹானகளோடு தென்னுட்டின ஹிந்து சமய மும்மூாததிகளான அத் வைத ஸ்ரீ ஆதிசஙகரா (788-820) விசிட்டாத்வைத ஸ்ரீ ராமானுஜர் (1017-1137), த்வைத ஸ்ரீமத்வாச் சார்யர் (1198-1275) ஆகியோரும திருபபதிககுப பெருமை சோத்தவ ராவார்கள

திருபபதி திருமலையில எழுநதரு ளிய ஸ்ரீ வேஙகடாசலபதியின புராண வரலாற்றுச சுருக்கம கீழே தரப படுகிறது.

உலக நலனுககாக நடை பெற்ற மகாயாக அவிர் பாகத்தை மும மூர்த்திகளில யாருக்குத் தருவது எனறு சோதிக்கப புறப்படுகிறுர்

பிருகு முனிவர் வைகுந்த நாதனின் திருவிளையாடலால முனிவர், அவரையே எட்டி உதைதது விடுகி ரார். இதயநாயகியான மகாலட்சுமி சினந்து பூலோகம் போய கரவீர புரததில தவ மேறகொளகினருள நாயகியைத் தேடி வநத நாயகன, சேஷாசலததில ஆதிவராக மூாததி யின அனுமதியோடு புறறிடம பெறு கிருர் சோழராஜனின வேலையாள புறறை இடிககவே நெறறிக காயத தோடு வனததில அலைகிருா ஸ்ரீநிவா ஸன துவாபர கண்ணனின யசோதை, வகுளமாலிகையாக வநது கலியுக ஸ்ரீநிவாசனைக காபபாறறுகிருள திரேதாயுகததிலே இராமபிரானிடம் வரம பெறற வேதவதி,நாராயண புர மனனன ஆகாசராஜனின மகளாகப பிறநது பதமாவதி எனற பெயரோடு வளாகிருள பதமாவதி ஸ்ரீநிவாஸன சநதிபபு ஏறபடடு, முடிவிலே 'கடன வாஙகி' கலயாணமும முடிகிறது! முனனவளான அனனை மகாலட்சுமி, திருசசானூரில தனிக் கோயில கொளளுகிருள, ஊடல தீாநத வேஙகடாசலபதி இரு தேவியரையும் இதயததில ஏறறபடி கோடான கோடி தீாதத மகததுவததோடு, ஏழு மலைமேல திகழகிருன

திருபபதி திருமலை யெஙகிலும 66 கோடித தீாததஙகள வியாபிததிருக் கினறன கால, நேர, வசதிகளுக கேறப, 1008, 364, 216, 108, 68, 26 18 எனறு கொளளலாம பிர தான தீாததமாகிய சுவாமி புஷ கரணி, துமபுரு தீாததம, நாரத தீாததம, ஆகாய கஙகை, பாபநாச தீாததம, கிருஷண தீாததம, சகர தீாததம, சபத ரிஷி தீாததம, பாண டவ தீாததம, கபில தீாததம, தொட்டி தீாததம, குமார தாரா தீர்த்தம, விஷவகஸேன தீாததம, பஞசாயுத தீாததம, இநதிர தீர்த் தம, அகனி தீாததம, பிரமம தீாத் தம, கோகாபப தீாததம முதலிய 18 தீாததஙகளிலும முறையோடு நீராடினல "குறையிலலாப பெரு வாழவு" பெறலாட எனகிறது "வேஙகடேச பராககிரமம்"

ஆண்டுதோறும மாசிபபெளாணமி யில் 66 கோடித தீர்த்தங்களும "கோனேரிக்கரை"யான சுவாமி புஷ கரணியில் சஙகமமாவதால, "அன் றைய புஷகரணி தீர்த்த ஸபரிசம சாவ பாபநாசம" என்கிறது பிரம் மாணட புராணம திருபபதி தீர்தத மகத்துவஙகளை அகத்தியா, வசிஷ டர், வியாசா, அதரி முனிவா, வால் மீகி, விசுவாமித்திரா, கண்வா, காசி பா, புலததியர், பராசரர், நாரதா, சுகா, மாாககண்டேயா, பரத்து வாசா, தூாவாசர் முதலான மகரிஷி கள சிரேஷடமாகக கூறியிருககிருர் கள. கலைமகளான சரஸவதியே திரு மலைமேல் புஷகரணித் தீாததமாக விளஙகுவதால் சர்வ கலைகளோடு கலவியும, அலைமகளான ஸ்ரீ மகா லட்சுமியை ஸ்ரீநிவாஸப பெருமாள் திருமாாபிலேயே ஏறறிருபபதால் வறறுத செலவமும, மலை மகளான உமாதேவியார் மகாவிஷணுவின சோதரியாக இருபபதால குறையாத வீரமும திருபபதி யாததிரையை நெறியோடு பூர்த்தி செயவோாக்குக் கிடைக்கிறது

திருபபதி திருமலை வரலாறறினை நாம அறிய, இனறு வரை கிடைத துள்ள கல்வெட்டுககள சுமாா 1060 ஆகும் தமிழ, தெலுங்கு, கனனடம, வடமொழி ஆகிய மொழிகளில உள ளன திருமலை மேல் ஆலயத்திலும, திருபபதி கீழக் கோயிலிலும ஏராள மான தமிழ்கல்வெட்டுக்கள உட்பிரா காரஙகளிலும இனறும காணலாம திருபபதி திருமலை ஆலயங்களின ஆரமப போஷகாகளான சோழாகள, பாண்டியாகளோடு 6-ம நூறறுண்டு முதல் பலலவ மாமனனர்களும இடம பெறுகிருாகள

7-ம நூறருண்டு

வைணவ ஆச்சார்ய பரமபரையில வரும நாதமுனிகள திருபபதிககு வநது ஆலய வழிபாட்டு நடைமுறை கள சிறபபில்லாதது கண்டு, தமது பேரன ஆளவந்தாரைத திருமலைச் சேவைககு அனுபபியிருக்கிருர் ஆன



திருமலைத் திருத்தேர்

யந்தாரின் பேரனுகிய திருமலை நம்பி யின் திருப்பதி தொண்டு குறிப்பிடத் தக்கதாகும் (திருமலை நம்பியின் மருமகனுன ஸ்ரீராமாநுஜரால் திருப் பதி க்ஷேத்திரம் பிற்காலத்தில் சிறப்பு பெறப் போகிறது) பிரதேச மன்னர்களின் மானயங்களோடு 7-ம் நூற்றுண்டின் இறுதியில் நந்திவர்மப் பல்லவன் தந்த ஏராளமான பொற் காசுகளால், ஆலய நந்தா விளக்குத் திருப்பணி சிறப்படைகிறது

8-ம் நூற்றுண்டு

தென்பாரதத்தில் சமண, பௌத்த மதங்கள் மெருகிழந்ததோடு மற்ற சில்லரை மதங்களும் இல்லாமல் தேய்ந்து வந்த காலக் கட்டம் பிற மதச் சூருவளியால் வீழ்ந்து விடா திருக்க சைவ வைணவச் செடி யிரண்டும் ஒரு மரமாகப் பிணைந்து வளர்ந்த நிலைமாறி, "நீயா நானு"ப் பூசல்கள் தோன்றிப் புகைந்த நேரம்! "திருப்பதி பெருமாள் சிவனு விஷ்ணுவா, முருகனு, அம் பாளா" என்ற சர்ச்சை உருவாகத் தொடங்கியது ஏழுமலை மூலவர், சங்கு சக்கரங்கள் இல்லாமல் இரு புயங்களோடு நிற்பதால் குன்று தோறும் ஆடும் குமரன் முருகன் என்றும், சடாமுடி, நாகாபரணம், மழுவோடு விளங்குவதால் சிவபெரு மான் எனவும், ஸ்ரீ சக்ரம் உள்ள கிரீடமும், சிம்ம இலச்சினை ஆலயத் துள் ஆங்காங்கே இருப்பதால் தேவி பராசக்தியெனவும் பேதாபேதச் சாச சைகள் பெருகி வளர்கின்றன. சிரத்தா பக்தியற்ற பட்டாச்சாரியர் களை அப்போதாண்ட திருப்பதி யாதவ மன்னன் தண்டித்து வெளியேற் றவே. ஆலயம் பூஜையற்றுப்போன நிலையில் சைவர்கள், கோயிலை ஆக்ர மித்து உரிமை கொண்டதாகச் சொல்லப்படுவதில் பிற்பகுதி உண்மை யாக இருக்க முடியாது என்பதை அடுத்த நூற்றுண்டு நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டப் போகின்றன.

9-ம் நூற்றுண்டு

சைவ வைணவ பேதமற்ற ஸ்ரீஆதி சங்கரர் திருமலை ஆலயத்திற்கு வந்து அத்வைதப் பெரு நோக்கிலே ஜனு கர்ஷண (மக்களை ஈர்க்கும்) தனகர் ஷண (செல்வத்தை ஈர்க்கும்) யந்திரப் பிரதிஷ்டை செய்ததோடு ஸ்ரீநிவா சப் பெருமானை அடி முதல் முடி வரை வர்ணித்து "விஷ்ணு பாதாதி கேசாந்த்ர ஸ்தோத்ரம்" பாடியிருக் கிறார். ஆதிசங்கரரின் 'பஜகோவிந் தம்' வைணவ பக்தி இலக்கிய ரத்தின மாக ஒளிர்வதாகும். கி பி 828-ல் திருமலை மூலத்தானம் புதுப்பிக்கப் பட்டதால 'திருவிளங்கோயில' ஏற் பட்டுத் தற்காலிக பூஜைகள் நடந் துள்ளன பல்லவ மன்னர்களின் ஆதரவுடன், யாதவச் சிற்றரசர்களின் மட்டற்ற சேவைகளாலும் திருமலை ஆலயம் செழுமை பெறுகிறது. சோழ பரம்பரையைச் சேர்ந்த 'சாமவை' எனும் பெண்ணரசி 3 ஆயிரம் குழி நிலத்தையும் 47 கழஞ்சு பொன்னை யும் திருமலை ஆலயத்துக்கு வழங்கு கிறுள்

10-ம் நூற்றுண்டு

ஆலய நிர்வாகத்தைக் கண் காணித்து வந்த திருமலை நம்பியின் முதுமை காரணமாக அடுத்த ஒரு சிறந்த நிர்வாகி தேவைப்பட்ட கால நிலை கி. பி 952-ல் பராந்தகச் சோழரின் படைத்தலைவன், ஏராள மான பொன்னுபரணங்களைத் திருமலை ஆலயத்திற்கு காணிக்கையாக வழங்கு கிறுன் கணக்கிலலாமல பொன்னும், மணியும் காணிக்கையாக ஏழுமலை யானுக்குக் குவிந்த காலக் கட்டத்தில் கோயிலைப் பேண வேண்டிய திருமலை வாழ் குடும்பத்தார் சிலரால் ஆலயப் புனிதம் பெருமளவில் பாதிக் கப்பட்டிருக்கிறது! இந்த நிலையில் சைவர்கள் ஏராளமாக வந்து ஏழு மலையானை வழிபடவே, முன்பே புகைந்து கொண்டிருந்த சைவ வைணவ மூர்த்தி பேதப்புகை தீயாய்க் கனிந்திருக்கிறது

11-ம் நூற்றுண்டு

கி பி 1001-ல் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டி உலகப்புகழ் பெற்ற ராஜராஜ சோழனின் காணிக்கை களோடு, சோழ அரசி அம்மனுர்



திருமலை காலிகோபுரத் தோற்றம்

என்ற மாதரசியின் 57 களஞ்சப பொன்னும் திருமலே ஆலயத்திற்கு கிடைததிருககிறது. 1016-ல் சோழ தேச பிராமணா ஒருவா 26 களஞ்சப பொனனே வழஙகியுள்ளார் இநத நிலையிலதான 'எம பெருமானுா', 'உடையவர்' எனப போறறபபடுபவருமான ஸ்ரீராமாநுஜா, ஸ்ரீரஙகததிலிருநது திருமலே ஆலய நிாவாக சேவைககு அனந தாழவான என்னும் தனது சீடனே அனுபபுகிறா 1030-ல ஸ்ரீராமாநுஜர் திருமலேககு வநது போயிருக்கிறுர் மூாத்தி பேதப பூசலும், திருபபதி ஆலய நடைமுறைக குழறுபடிகளும அவரைத தீவிரமாகச சிநதிகக வைக்கின்றன

## 12-ம் நூற்றுண்டு

யாதவ, சாளுவ, காகதீய, ஹொயசள மனனாகளோடு, ஸ்ரீராமானுஜரால வைணவரான விஷணுவாததனரும திருமலே பெருமாளேப போறறிய நூறறுணடு 1130-ல இரணடாம முறையாக ஸ்ரீராமாநுஜா திருமலேககு வநது ஆலய நிாவாக நடைமுறை, பூஜை வழிபாடுகளே ஒழுஙகு படுத்தியதோடு, கீழத திருபபதி கோவிநதராஜப பெருமாள ஆலயத்தையும விரிவுபடுததி, தனனல மறறு ஆலயததை நிாவகிகக 'ஜீயர்கள' ஸதானததை ஏறபடுததி திருமலேயின முழு நிாவாகப பொறுபபையும அவாகளிடம ஒபபடைககிறுா

மூனறு நூறறுண்டுகளாகத் தொடாநத மூாததி பேதச சாச்சைககு, சாம, தான, பேத சாதுாயஙகளாலும 'அலாமேல மஙகை உறை மாாபா' எனற நமமாழவாா பாசுர ஆதாரததையும எடுததுக காட்டி, அனறைய திருபபதி மனனன கட்டிதேவ யாதவராயன அவையிலே, ஏழுமலே மூலவா 'சஙகு சககர ஸ்ரீநிவாசன'தான எனபதை ஸ்ரீராமாநுஜா உறுதி செயகிறுா ஸ்ரீரங்கத்தை மையமாக வைதது 120 வயது வரை வாழந்து வைணவத்தைக் கட்டிககாதத ஸ்ரீராமாநுஜா மூர்த்தி பேதத்தை விரும்பாதவா என்பதறகு ஸ்ரீரஙக விமானத்தில இடம் பெற்றுள்ள தூககை, விநாயகாகளே சாட்சி அதோடு வைணவக் கோட்டையான திருநாராயண புரததிலே சிதிலம அடைநது இடிநது கிடநத சிவன கோயிலேச சீரபடுததி பூஜைககு வழி வகுத்திருககிறுா ஸ்ரீராமாநுஜ வளளல திருமலே காாபபாதை விநாயகரும, குமாரதாரை முருகன் சனனதியும, கபில தீாத்த ஈசுவரன கோயிலும சான்னித்யம குறையாமல இனறளவும ஆராதனே பெறுகினறன '18 வைணவ சமபரதாயங்களில முருகன கோயிலுககுச செனறு வழிபடுவதும ஒனறு' எனற 'புகைபபட' ஆதாரமும, 12-ம நூறறுணடு ஷண்முகா சிறபம, திருமலே திருபபதி பொன் விழா மியூசியததில இடம பெறறிருபபதும மூாததி பேதஙகளேத தீாதது வைபபவையாகும

## 13-ம நூறறுணடு

ஸ்ரீராமாநுஜரின், கட்டளேபபடி, இரு மடாலயஙகளின ஞானுநுபவ

> 'கோவிந்தா' என்றுல் இபபூமி முழுவதையும அறிநதவன, பசுககளின ரக்ஷகன, வேதஙகளினுல் அறியபபடுபவன எனறெலலாம ஆாததம ஜீவாதமா, பரமாதமா நிலேயை குறிககும சொல இது

'ஜீயா'களால திருமலே ஆலய நிாவாகம பெரு வளாசசி கண்டு, இது நாள வரை தடைபபட்டு நினறிருநத பெருவிழாவான பிரமமோதஸவம, மீண்டும இந்த நூறறுண்டில தொடஙகுகிறது 1251-ல நெல்லூா, கடபபை வரை கைபபறறிய சடைய வாம சுநதர பாணடியன் திருமலே ஆலயததிறகுப பல பொற்கலங்களேக் காணிககை தருகிறுன 1260-ல் வீர நரசிமம யாதவராயர் ஆலய கருவறை விமானததிறகு முதன முதலாகப பொன வேயந்தாா 1268-ல பிறநத வேதாநத தேசிகா திருமலேக கோயிலின காண்டாமணியின அமசமாக அவதரிதது ஆலயததோடு நூறறுண்டு காலம இரண்டறக கலநதே வாழநதிருக்கிறுா இதையொட்டிய காலக கட்டத்திலதான மகான வியாச தீர்த்



திருமலே மேல்

திரு. டி எல். திருவேங்கடம் - திருப்பதி.



திருமலை "க்யூ" கட்டிடத்தொகுதி

தரின சேவையும, அகோபில மடத தின ஜீயாகளது கவனிபபும ஆலயத திறகு ஏராளமாகக கிடைததது 1294-ல டெலலி பாதுஷா அலாவுதீன, தெனனுட்டினமேல முதல முறையாகப படையெடுதது, ஏராள மான பொனனுபரணஙகளைக கவாநது செனறுன அபபோதைய திருபபதி பகுதி அரசாகளான யாதவ, காகதீய, ஹொயசளாகள ஒனறு படடு அனறு எதிாததிருநதால, பின னுளில முகலாயாகளால கவரபபட்ட தெனனக ஆலயஙகளின கோடான கோடி பெருமானமுளள தஙக, வைர, நவரததினஙகள இனறும நமது உடமைகளாக இருநதிருககும

## 14 ம நூறறுண்டு

ஆலயச செலவஙகளை 'ருசி' கண்ட மொகலாயப பூனைகளின மோபபம, தெனனுட்டை அடுததடுததுத தொடருகிறது ! 1307, 1310-ல மாலிககாபூா, 1317-ல குஸருகான, 1323-ல உலூாகான இபபடியாக முகமமதியாின படையெடுபபுகள தொடாநது 1325-ல தெனனுட்டின பெருமபகுதி முகமமதிய ராஜாவான துகளக வசம சோநதது ஹிநதுமத மறுமலாசசிககும, ஆலயஙகளின வளாசசிககாகவும ஆண்டவனே அருளியது போல 1336-ல விஜய நகர பேரரசு தோனறியது பேரரசின கிளைகளான சஙகம, சாளுவ, துளுவ மனனாகள திருமலை சேவையையே முழுமுதறகடமையாக ஏறகின றனா, திருமலை ஆலயம புதுபலம பெறுகிறது 1356-ல விஜயநகர மனனரான, சாளுவ மஙகதேவா திருமலை கோபுரததுககுப பொன வேயநதாா முகலாயாின சூறை யாடலிருநது திருபபதியில சுமாா 50 ஆணடுகள வைததுக காபபாற்றப பட்ட ஸ்ரீ ரஙகநாதா (உறசவமூாததி) 1371-ல மீண்டும திருவரஙகம போயச சேருகிறாா மேறபடி நூறறுண டில தொடாநது ஆலயம நேரடியாகப பாதிககபபடவிலலை யெனறுலும, சீரான வழிபாடு திருமலையில ஸதமபித்துவிட்டது எனறே கூறலாம

## 15-ம நூறறுண்டு

விஜயநகர சாமராஜயம தழைத துச செழிதத இநத காலக கட்டத தில, அவாகளது இஷ்ட தெயவமாகி விட்ட ஏழுமலையான கோயில, வரலாறு காணுத வகையில பொருள வளம கண்டதாக வரலாறு கூறு கிறது 1404-ல இரண்டாம ஹரி ஹரா 'ஸ்ரீ வேஙகடேஸவராய நமவூ எனனும சுலோகம பதிதத நாண யததை வெளியிட்டாா 1444-ல வீர நரசிமம யாதவராயா மணிமண்டபம, 1456-ல கட்டிசாளுவா, அலிபிரி கிராமததையே கோயிலுககு வழஙகியது, சாளுவ நரசிமமன கோயிலுககுப பொனவேயநததோடு, பதது கிராமங களையும தநதது 1464-ல் சாளுவ மலலயய தேவன ஆயிரககால மண் டபம கட்டியது 1490-ல 7 மைல நீளம திருமலைககுக கீழிருநது படிக் கட்டுகள அமைததது முதலான ஏராளமான முனனேறறஙகள 'பாலநிதிவேஙகடததுறைவன' எனற மஹான 'திருவேஙகட மஹாத்மியம்' பாடியது திருமலையான புகழமிக்க பாரததததை விலலிபுததூராா எழுதி முடிததது 32 ஆயிரம பாடலகளை ஏழுமலையான மேல, மஹாகவி 'தாளளபாகக ஸ்ரீஅனனமாசசாாயா' பாடிக கொடுததது போனற பறபல அறபுதச சிறபபுகளைப பெறுகிறது திருபபதி திருமலை

## 16-ம நூறறுண்டு

விஜயநகர துளுவ வமச மனனா களுள அழியாப புகழ பெறறவா ஸ்ரீ கிருஷண தேவராயா அவர் பட்டததிலிருநத 1509 முதல 1529க் குள ஏழு முறை திருமலை வநதிருக கிறாா, ஏழு கிராமஙகளை பல சேவை களுககாகத தநதிருககிறாா திருமலை ஆலயததில தஙக பலி பீடம, தஙகக கொடி மரம முதலானவை ஏறபட டன 1513-ல ஏராளமான வைர நகைகளோடு, கனகாபிஷேகமும செயது, ஆலய கோபுரததுககுப பொன வேயநத கிருஷண தேவராய ரைப போலவே, அவரது மனைவியா களான திருமலை தேவி, சினனுதேவி இருவரும போட்டி போட்டுக் காணிககைச செலவஙகளைக குவித திருககிறாாகள திருமலைக கடவுளுககு மேறபடி மூவரது ஆளுயர வெண் கலச சிலைகளைத திருமலை ஆலயததில இனறும காணலாம 1528 சாஸனப படி கோயில பூஜைககாராகள ஏழு

மலையானின நகைகளைத திருடிவிட, மனனன சாளுவ நரசிமமன சமபந தபபட்டவாகளுககு மரண தண்டனை கொடுததால் திருமலை ஆலயததில சில மாதஙகள பூஜைகள நினறு போய, பிறகு துவஙகியிருககிறது கிருஷண தேவராயருககுப பின வநத அசசுத தேவராயர் (1530-1542), சதாசிவராயா (1542-1575), திருமலை ராயா (1576) முதலான மனனர் களின ஏராள நிலதானஙகளால் திருமலையின தானிய வருவாய பெருகியது இநத இடததில நினைவு கொளள வேணடியவா மணவாள ஜீயரின பிரதான சீடரான கநதாடை ராமாநுஜ ஐயஙகாா. திருமலை யாதரீகாகளின உணவுத தேவை, பிரசாத வகை, மறறும பொது நலன களைச சிறபபாக மாறறி அமைதத கந்தாடை ராமாநுஜரை பல கல வெட்டுகள பாராட்டுகினறன 1548-ல துவார பாலகாகள ஸதாபிதம, 1561-ல திருமலைராயன மணடபம அமைநதது ஏழுமலையாரின அதயநத பகதரான அகபரின பொககிஷ அமைசசா ராஜா தோடாமால 1659-ல வைகுநத பதவியடைகிறா இநத நூறறாண்டின பிறபகுதியில திருமலை ஆலயததைக கொளளையிட முயனற போாததுகீசியா தோலவியடைநதாலும தொலலைகள நீடிக கினறன

## 17-ம நூற்றாண்டு

போாததுகீசியர், டசசுக்காரர், பிரிட்டிஷாா ஆகிய மூவரும பாரதததின வளஙகளை, ஆலயஙகளின செலவஙகளைத தனிததனியே 'மோபபம' பிடிதது, ஒருவரையொருவா முநதுவதில அடிததுக 'கடிதது'க கொண்ட கொடுமைகளெலலாம முடிநது பிரிட்டிஷ கிழக்கிநதிய வாணிபக கழகம 1600-ல ஏறபடுகிறது வைரமும தஙகமுமாகக் குவியும திருமலை ஆலய உணடியலைக குறி வைக் கினறன 'கழக'ததின பூனைககள்கள' 1610-ல ராஜ ஒடையாா மைசூர் ராஜயததை மீண்டும உருவாககி முடி சூடுகிறாா 1618-ல ஏறபட்ட கோல கொண்டா படையெடுபபால திருமலை ஆலயம வருவாயை இழநததோடு, சூனயததிலும ஆழநதிருககிறது 1639 முதல மைசூா அரசாகள அககறை கொணடதால, திருமலை ஆலயம படிபபடியாக சமநிலை பெறுகிறது 1646-ல் விஜயநகர கடைசி வாரிசான ஸ்ரீரஙகனின வேலூா கோட்டை மேல, பிஜபபூா சுலதான படையெடுககவே போாச செலவுக காக திருமலையின உணடியலபணததை யெடுதத ஸ்ரீரஙகன, போரிலே தோலவி கண்டு மடிகிறான இநதக காலக கட்டததிலதான ஸ்ரீ வேஙகடாசலபதியின அருளால பிறந்து (1581-1671) வேங்கடநாதனுக வாழநத ஸ்ரீராகவேநதிர சுவாமிகள, பிஜபபூா சுலதானின சிறறரசனுன சிததி மசூதகானுககுப பேரருள புரிநத மகததுவததால திருமலை ஆலயம் பெரும புகழகொணடது 1668-ல் ஆலயப பணததிலே உரிமை கொண்ட புதுவித சமயச சட்டததைப போட்டுஹிநதுககளின மத உணாவை நோட்டமிடுகிறது வெளளைக கமபெனி 1670-ல திருபபதி பகுதியைப போர் மேகம சூழுகிறது 1672 முதல கோல கொணடா நவாபும, மீாஜுமலா படைகளும மாறி மாறித திருமலை பகுதியைப பநதாடி கைப பறறத் துடிககினறனா. 1674-ல முடி சூடிகொண்ட சதரபதி சிவாஜியால் ஹிநது மதம புதுபலம பெறறு லும, சிவாஜியின பாாவை திருபபதி பககம திருமபாததால 1680-ல மீர் ஜுமலா படைகள திருபபதியைக் கைபபறறுகினறனா ஆயுத பலமுளள கமபெனி, அவனிடமிருந்து ஆலயததை மீட்டு நவாபிடம குத் தகைககு விடத திட்டமிடுகிறது.

## 18-ம நூறறாண்டு

1707-ல ஏழுமலையான ஆலயததை ஆறகாடு நவாபிடம் அடமானம் வைககிறான வெளளையன. 1730-ல்

ிருஷ்ணராஜ ஒடையாரின் அகண்ட ப கைங்காயமும், சிரத்தா பக்தி ம திருமலைக்கு மீண்டும் பெருமை ளைச் சேர்க்கின்றன 1751-ல் ஆர்மி' என்கிற வெள்ளையரின் குறிப் பின்படி திருமலை வருவாய் 24 ஆயிரம் பவுன்கள், நவாபிடமிருந்த ஆலய உரிமையை 'ராபார்ட் கிளைவ்', கம் பெனியின் பெயரால் தட்டிப் பறித் துக் கொள்ளுகிறார் 1753 முதல், பெருகிய திருமலை ஆலய வருவாய்க் காக வெள்ளையர், நவாபுகளின் திரை மறைவுப் போட்டா போட்டிகள் நடந்து வந்தன 1758 முகலாய மன்னர்கள் கூட்டணியமைத்துத் திரு மலைமேல் படையெடுத்தனர் ஆலய வாசலில் ரத்தக்களரி வழக்கம் போல வெள்ளையரே ஜெயித்து, அதிக தத்தகைக்கு ஆற்காடு நவாபிடமே ஆலயத்தை மீண்டும் ஒப்படைக்கின்றனர் நவாபின் 'கெடுபிடி'யினால் வெள்ளையர்கள் அதிர்ச்சியடை கின்றனர்

19-ம் நூற்றாண்டு.

1801-ல் நவாபின் திருமலை நிர் வாக உரிமை, கம்பெனியாரால் பறி முதல் செய்யப்படுகிறது 'ஜான் வேலஸ்' என்பவர் தலைமையிலே வேலஸ் கமிட்டி' ஆலய நிர்வா கத்தை ஏற்கிறது 1831-ல் மைசூர் ராஜ குடும்பம் கம்பெனியாரிடம் அரசுரிமையை இழக்கிறது அந்த நிலையிலும் திருமலை சேவையில் சீராகச் செயல்படுகிறது 'பயிரையே மேயும் வேலி'யாக 'வேலஸ் கமிட் டி'யே மாறியதால், 1843-ல் திருமலை யில் இருந்த வட இந்திய 'ஹதிராமஜி மடத்து' மஹந்துகளிடம் நிர்வா கத்தை ஒப்படைத்து, விலகியிருந்து கண்காணிக்கிறது வெள்ளைக் கம் பெனி 1857-ல் நடந்த சிப்பாய் கலகத்தால் எச்சரிக்கை பெற்ற லண் டன் மேலிடம் 1858-ல் கம்பெனி யைக் கலைத்து இந்தியாவை நேரடி யாக ஆள முற்படுகிறது 'மத சுதந் திரத்தில் தலையிட மாட்டோம்' என்ற விக்டோரியா ராணியாரின் பிரகட னத்தால் வெள்ளையரின் அடக்கி யாளும் முறையிலிருந்து திருமலை ஆலயம் ஓரளவு விடுபடுகிறது 1875-ல் வீரராகவ சுவாமிகளால் 'திருவேங் கட தல புராணம்' உருவாகிறது புகழ் மிக்க 'கருடோத்ஸவம்' 'திருப்பதி குடை' விழாக்கள் ஏற்படுகின்றன. 1881-ல் ஏழுமலையானின் திருவரு ளால் மைசூர் ராஜ குடும்பத்திற்கு மீண்டும் அரசுரிமை கிடைத்து விடு கிறது

20-ம் நூற்றாண்டு

1909-ல் இராமலெட்சுமண பாவா என்கிற ஜீயர் பெருமான் திருமலை கோபுரத்துக்குப் பொன் வேய்கிறார் 1914-1918 முதல் உலகப் போர் காலங்களிலும், மஹந்துகளால் திருப் பதி திருமலையில் படிக்காவல் கோபு ரம், திருக்குளப் பராமரிப்பு, மின் சார இணைப்புகள் 1928 காலக் கட் டத்திலே ஆண்டு ஒன்றுக்கு சுமார் 20 ஆயிரம் ரூபாய்களை பல தாமங் களுக்காகத் திருமலைக்கு ஒதுக்குகிறது மைசூர் அரசு (மலையின் பரப்பளவு 10 மைல்) 1933-ல் சென்னை மாகாண சட்டசபைத் தீர்மானப்படி (ஆந்திர மாநிலம் அப்போது இல்லை) ஆலய நிர்வாகம் மஹந்துகளிடமிருந்து ஓர் தனிக் கமிட்டியிடம் போகிறது 1939-45 இரண்டாம் உலகப் போர்க் காலங்களில் திருமலையில் யாத்ரீகர் தொகை குறைந்திருக்கிறது 1944-ல் இரண்டு பஸ்களோடு 12 மைல் தூர திருப்பதி திருமலை பஸ் போக்கு வரத்து ஆரம்பம் (இப்போது சுமார் 500 பஸ்கள்) 1947-ல் சுதந்திரம் 1953-ல் குடியரசு 1951-ல் 'இந்து மத ஆலயப் பாதுகாப்புத் துறை' ஏற்பட்டு, திருப்பதி திருமலை தேவஸ் தானம் போர்டு (T T D) உருவாகி, சுற்றுப்புற சுமார் 40 கோயில்களை யும் இணைத்துக் கொண்டு, நிர்வாகம் விரிந்து கொண்டே போகிறது இன் றைய (1985) திருப்பதி திருமலை ஆலய ஊழியர் தொகை சுமார் ஏழாயிரம் 1953-ல் ஆந்திர ராஜ்யப் பிரிவினையேற்பட்டு, தமிழகத்து எல்லையாக விளங்கிய வடவேங்கடம், ஆந்திர சோதரரின் பங்காகப் போய்ச் சேருகிறது 1958-ல் 20 லட்ச ரூபாய் செலவிலே 40 அடி உயர 'ஆனந்த விமானம்' பொன் வேயப் படுகிறது 1959-ல் அடியேன் (வேம் பத்தூர் கிருஷ்ணன்) முதன் முத லாகத் திருமலையானைத் தரிசித்த போது சுமார் 4 ஆயிரமாக இருந்த தினசரி யாத்ரீகர்கள் தொகை, 1975-ல் 10 ஆயிரம், 1983-ல் 30 ஆயிரம், இப்படியாக உயர்ந்து 22-9-85, கருடோத்ஸவ தினத்தில் மட்டும் $2\frac{1}{2}$ லட்சம் பக்தர்களாகப் பெருகி வருகிறது 26-10-85 தேதி யில் மட்டும் 230 திருக்கல்யாண உற் சவங்கள்! திருமலையில் அரிதாகி வரு பவை, 'ஸ்ரீராம தூதர்களே' ஆயிரம், லட்சங்களைக் கடந்து, 10-6-85 முற் பகல் உண்டியல் வருவாய் மட்டும் சுமார் $4\frac{1}{2}$ லட்ச ரூபாய் அளவில் உயர்ந்துள்ளது 6 கோடி ரூபாயில் வைரக் கிரீடமும், ஏழுமலையானுக்கு 20-12-85 அன்று சூட்டப் பெற்றது 3 கோடி செலவிலே 16,500 பக்தர் கள் ஒரே சமயத்தில் தங்கும் வசதி கொண்ட பிரமாண்டமான நவீன 'கியூ' வரிசை மண்டபம் (வைகுண் டம்) 6-4-85 முதல் செயல்படுகிறது

இவ் 'பாலாஜி திவ்யக்ஷேத்திர'த்தில் தொன்மையான புனித விழாக்களும், புகழ்மிகு சம்பிரதாயங்களும் அதி வேக நவ நாகரீகச் சூழல்களால் கரைந்துவிடாமல் திகழ்வதாகுக

ஆதி நாரணனே போற்றி அலர்மேலு
நாதா போற்றி
வேத பூரணனே போற்றி வேங்கடத்
துறைவாய் போற்றி
போதலர் பொருளே போற்றி புண்ணிய
ஸ்வரூபா போற்றி
ஸ்ரீதரா' துளபமாலே' திருவடி
போற்றி போற்றி!



# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இனி எட்டாவது காரணம் 'பீதாம்பரத்வாத்' என்பது. மஞ்சள் நிறமுள்ள ஆடையை அணிந்திருப்பதனால் என்பது அதன் பொருளாகும்.

பீதகவாடையுடைமை பரப்ரஹ்மத்திற்குத் தனிப்பட்டதொரு தன்மையாகும். அங்ஙனமே, பிருஹதாரண்யகம் நான்காமத்தியாயம் ஆறாவது ப்ராஹ்மணத்தில் 'தஸ்ய ஹ ஏதஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா மாஹாரஜநம் வாஸ: யதா பாண்டு ஆவிகம் யதா இந்த்ரகோப: யதா அக்ந்யர்ச்சி: யதா புண்டரீகம்' என்று கேட்கப்படுகிறது.

இந்த ச்ருதியின் பொருள் வருமாறு - தஸ்ய ஏதஸ்ய புருஷஸ்ய= மூர்த்தம் அமூர்த்தம் (கடினமானது கடினமல்லாதது) என்னும் சரீரத்தோடு கூடியதாய் - அதாவது எல்லா ஆத்மாக்களையும் ஜடப்பொருள்களையும் சரீரமாகக் கொண்டதாய்ப், புருஷ சப்தத்தினால் கூறப்பட்ட இந்த பரப்ரஹ்மத்தினுடைய, ரூபம் = திருமேனியானது, யதா மாஹாரஜநம்= மகாரஜநமெனப்படும் குஸும்ப புஷ்பத்தின் சாற்றினால் சாயமிடப்பட்ட வஸ்த்ரம் முதலியவற்றோடு ஒத்திருக்கிறது. ஆக இதிலிருந்து பகவானுக்குக் குஸும்ப மலரின் நிறமுள்ள திருமேனியும் உண்டென்ற கருத்துத் தோன்றுகிறது. வாஸ; = வஸ்த்ரம். தஸ்ய ஏதஸ்ய புருஷஸ்ய என்பது இதுதன்னிலும் அந்வயிக்கிறது. தஸ்ய ஏதஸ்ய புருஷஸ்ய வாஸ:=முற்கூறிய இந்த பகவானுடைய வஸ்த்ரமானது, யதா பாண்டு ஆவிகம்=வெண்மையான கம்பளம் போன்றது; யதா இந்த்ரகோப:=இந்திர கோபமென்னும் பூச்சி போன்றது, யதா அக்ந்யர்ச்சி:=அக்நிஜ்வாலை போன்றது; யதா புண்டரீகம் = செந்தாமரை போன்றது. ஆக பகவானுடைய வஸ்த்ரமானது வெண்கம்பளம் இந்திரகோபப்பூச்சி அக்நிஜ்வாலை செந்தாமரை ஆகிய இவற்றோடொத்த நிறமுடையது என்றபடி.

இங்கு தஸ்ய ஏதஸ்ய வாஸ: - யதா பாண்டு ஆவிகம், தஸ்ய ஏதஸ்ய வாஸ: - யதா இந்த்ரகோப: என்றிப்படி வாஸ: என்பதனை எல்லாவற்றோடும் கூட்டுவதற்காக ஆவ்ருத்தி (அடிக்கடி உச்சாரணம்) செய்தால், பகவானுக்கு வெண்கம்பளத்தோடொத்த நிறமுடையதொரு வஸ்த்ரமும் இந்திர கோபத்தோடொத்த நிறமுடைய மற்றொரு வஸ்த்ரமும் அக்நி ஜ்வாலையோடொத்த நிறமுடைய வேறொரு வஸ்த்ரமும் செந்தாமரை யோடொத்த நிறமுடைய இன்னொரு வஸ்த்ரமும் உண்டென்று பொருள்பட்டு வெவ்வேறு நிறமுள்ள நான்கு வஸ்த்ரங்கள் ஸித்திக்கின்றன என்றும், வாஸ: என்பதனை ஆவ்ருத்தி செய்யாவிட்டால், ஒரே வஸ்த்ரத்திற்குப் பல பொருள்களோடு ஒப்புமை கூறப்பட்டு அதனால் ஒரே வஸ்த்ரத்திற்குச் சித்திரவர்ணமுடைமை (பலவகைப்பட்ட நிறமுடைமை) ஸித்திக்கின்றது என்றும் அறியத்தக்கது.

அல்லது—தஸ்ய ஏதஸ்ய புருஷஸ்ய ரூபம் வாஸ: ச=முற்கூறிய இந்த பகவானுடைய திருமேனி வஸ்த்ரம் ஆகிய இரண்டும், யதா மாஹாரஜநம் யதா பாண்டு ஆவிகம். யதா இந்த்ரகோப: யதா அக்நியர்ச்சி: யதா புண்டரீகம்=மாஹாரஜநம் வெண்கம்பளம் இந்த்ரகோபப் பூச்சி அக்நிஜ்வாலை செந்தாமரை ஆகிய இவற்றோடொத்த நிறமுடையன—என்று பொருள் கொள்க. இங்கு மாஹாரஜநமென்பதற்குக் குஸும்ப மலரின் நிறமுடைய வஸ்து என்று பொருள். யதா மாஹாரஜநம் என்பதனால் பகவானுடைய திருமேனிக்கும் வஸ்த்ரத்திற்கும் குஸும்பமலரின் நிறமுடைய வஸ்துவோடு ஒப்புமை போதிக்கப்படுகின்றது.

இப்போது கூறிய பொருளில்— திருமேனியைப் போலவே வஸ்த்ரமும் உத்தேச்யமாகையாலே (பல


*தமிழாக்கம்:*
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
*சிரோமணி வித்வான்*
*திருப்பதி.*


பொருள்களோடு ஒப்புமையென்னும் விதிக்கப்படும் பொருளுக்கு ஆதாரமான விசேஷ்யமாகக் கருதப்பட்டதாகையாலே) அவ்வஸ்த்ரத்தைக் குறிக்கும் வாஸ: என்னும் பதமானது, யதா மாஹாரஜநமென்னும் விதேய வாசகமான (விதிக்கப்படும் பொருளைக் கூறுமதான) பதத்திற்கு முன்னேயே படிக்கப்பட்டிருக்க வேண்டிய அவசியம் உள்ளதுதான். ஆகிலும் இந்த ச்ருதியில் பதங்கள் படிக்கப்பட்டிருக்கும் வரிசை முறை கருதப்படாமையாலும், வாஸ: என்பது யதா மாஹாரஜநம் என்பதற்குப் பின்னாலிருந்தாலும் (கருதப்பட்ட இப்பொருளுக்காகச் செய்யப்படுகிற) அந்வயத்தை அனுஸரித்து, அதற்கு முன்னே வாஸ: என்பதனைச் சேர்த்

துக்கொள்ளத் தடையில்லாமையாலும் கருதிய பொருள் கிடைப்பதில் பாதகமேதும் இல்லை என்க.

ஐயா, இந்த ச்ருதிவாக்யம் வேதார்த்தஸங்க்ரஹத்தில் பகவத் பாஷ்யகாரரால் பகவானுடைய திருமேனியைக் கூறுவதாக எடுத்தாளப் பட்டுள்ளது. ஸ்ரீபாஷ்யம் மூன்றுமத்தியாயம் இரண்டாம் பாதம் உபயலிங்காதிகரணத்தில், "தஸ்ய ஹவா ஏதஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா மாஹாரஜநம் வாஸ: (முற்கூறிய இந்த புருஷனுடைய திருமேனி குஸும்ப மலர்ச்சாறு பூசிய வஸ்திரத்தைப் போன்றது) என்று தொடங்கும் வாக்கியத்தினால் திருமேனியையும் கூறி" என்றுள்ள நூற்பகுதியினால் இந்த ச்ருதி திருமேனியைக் கூறுவதாகவே அந்த பாஷ்யகாரரால் வருணிக்கப் பட்டுள்ளது. அதை அனுஸரித்து மற்ற ஆசாரியர்களாலும் இந்த ச்ருதி திருமேனி விஷயமாகவே ஒருங்கவிடப் பட்டுள்ளது. ஆகையினால் இந்த ச்ருதிக்குத் திருமேனியை மட்டும் குறிப்பதாகவே வ்யாக்யானம் செய்ய வேண்டிய தகுதியிருக்க, வஸ்த்ரத்தைக் குறிப்பதாக வ்யாக்யானம் செய்வது எங்ஙனே பொருந்தும் என்று ஒரு கேள்வி இங்கு எழுகின்றது.

அதற்கு விடை வருமாறு-ஸ்ரீபாஷ்யகாரரும் பிறரும் திருமேனி விஷயமாக இந்த ச்ருதிக்கு வ்யாக்யானம் செய்திருந்தாலும், வேதார்த்தஸங்க்ரஹத்தின் வ்யாக்யானமாகிய தாத்பர்ய தீபிகையில், 'ஸ்வாநுரூப பீதாம்பரதர:' (தனக்குப் பொருந்திய—அதாவது தனது நீலமேனியைப் பளிச்சென்று எடுத்துக் காட்டுகிற பீதகவாடை (பொன்னுடை)யணிந்தவன்) என்ற வேதார்த்த ஸங்க்ரஹ வாக்யத்துக்கு (உடையவர் திருவுள்ளத்தை அறிந்து) உரையிடாநின்ற ச்ருத ப்ரகாசி காசார்யரால் "ஸ்வாநுரூப பீதாம்பரதர: என்ற இவ்விடத்தில் 'தஸ்ய மாஹாரஜநம் வாஸ: (அந்த பகவானுடைய வஸ்த்ரம் குஸும்பமலரின் நிறமுடையது) என்ற ச்ருதி வாக்யம் கருதப்பட்டது" என்று இந்த ச்ருதி பீதாம்பர விஷயமாக உதாஹரிக்கப்பட்டபடியால் நாமும் முற்கூறிய வேதார்த்த ஸங்க்ரஹ - ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையொட்டித் திருமேனி விஷயமாகவும் வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்ய தீபிகா ஸ்ரீ ஸூக்தியை யொட்டி வஸ்த்ர விஷயமாகவும் முன்பு இந்த ச்ருதிக்கு உரையிடலானோம். ஆக பாஷ்யகாரரின் க்ரந்தத்தோடு பொருந்துவதனால், இந்த ச்ருதி திருமேனி வஸ்த்ரம் ஆகிய இரண்டையும் குறிப்பதாகக் கொள்ளுதல் சாலப் பொருந்தும். முன்பு எடுத்துக் காட்டிய வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்ய தீபிகா வாக்கியத்தில் 'தஸ்ய மாஹாரஜநம் வாஸ: என்ற ச்ருதி கருதப்பட்டது' என்று கூறுகிற ச்ருத ப்ரகாசிகாசார்யரால், ச்ருதியிலுள்ள தஸ்ய என்ற பதம் ரூபமென்ற பதத்திற்கு முன்னேயிருந்த போதிலும், அது அதற்குப் பின்புள்ள வாஸ: என்ற விடத்தில் சேருகின்றதென்னும் விஷயம் குறிப்பாகக் காட்டப் பட்டது.

இந்த ச்ருதியானது திருமேனி வஸ்த்ரம் ஆகிய இரண்டையும் விதிக்கின்றது (புதிதாக அறிவிக்கின்றது) என்று கொண்டால் வாக்ய பேதமென்னும் குற்றம் நேரிடுமேயென்று கூறுதல் தகாது. ஏனெனில் முற்கூறிய விசித்திர (பல வகைப்பட்ட) நிறமுடைய திவ்ய பீதாம்பரத்தோடு கூடிய திருமேனியை விதிப்பதாகக் கொள்ளுதலால் இது பலவற்றை விதியாமல் விசேஷணத்தோடு கூடிய ஒன்றையே விதிக்கும் விதியாகையாலே வாக்ய பேதமென்னும் குற்றம் இங்கு நேரிட இடமில்லை யாகையால் என்க.

பூர்வ மீமாம்ஸா சாஸ்திரம் முதலத்தியாயம் நான்காம் பாதம் ஒன்பதாம் ஸூத்திரத்தில் ஜைமினி மஹர்ஷியால் விசிஷ்டவிதி (விசேஷணத்தோடு கூடிய விசேஷ்யத்தை விதிக்கும் விதி) ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதன்றோ. 'தத்குணஸ்து விதீயேரந் - அவிபாகாத் விதாநார்த்தே - ந சேத் அந்யேந சிஷ்டா:' என்பதே அந்த ஸூத்திரம். இதில் 'ந வாக்யபேத:' என்பதைச் சேர்த்துக் கொள்ள வேணும். அந்யேந சிஷ்டா: நசேத்= வேறு வாக்கியத்தினால் விதிக்கப்படவில்லையானால், தத்குணா: விதீயேரந்= அதுவும் (முக்கியமான பொருளும்) அதன் குணங்களும் (பொருள் விசேஷ்யமாகவும் அதன் குணங்கள் விசேஷணங்களாகவும்) விதிக்கப்படும்; விதாநார்த்தே=விதிக்கப்படும் பொருளில், அவிபாகாத்=விபாகம் அதாவது பன்மை - இல்லாமையாலே, வாக்யபேத: ந=வாக்ய பேதமென்ற குற்றமில்லை - என்பது இதன் பொருள்.

இதற்கு உதாஹரணமான விஷய வாக்கியம்—'யதாக்நேய: அஷ்டாகபால: அமாவாஸ்யாயாம் பௌர்ணமாஸ்யாஞ்ச அச்யுதோ பவதி' (தை. ஸம். 2-6-3-3) என்பதே. அக்நியை தேவதையாகக் கொண்டதும் எட்டுக் கபாலங்களில் (மண் பாத்திரங்களில்) பக்குவம் செய்யப்பட்ட புரோடாசமென்னும் மாவுணவை ஹோமத்ரவ்யமாகவுடையதுமான யாகமானது அமாவாஸ்யையிலும் பௌர்ணமாஸியிலும் நழுவாததாக (அவச்யம் செய்யப்பட வேண்டியதாக) உள்ளது. என்பது இவ்வாக்கியத்தின் பொருளாகும்.

இதுதன்னில், ஆக்நேய: அஷ்டாகபால: என்பவை - தேவதை த்ரவ்யம் முதலிய குணங்களை விதிக்கின்றனவா அல்லது இவை யாகத்திற்குப் பெயர்களா என்று ஸந்தேஹத்தைத் தெரிவித்து, குண விதியானால் - அக்நி எட்டுக் கபாலங்களில் பக்குவம் செய்தல் புரோடாசம் ஆகிய பல குணங்களை விதிக்க வேண்டியிருப்பதால் வாக்கிய பேதமென்ற குற்றம் நேருமென்று அஞ்சி - இவை குணவிதியல்ல என்று ஆட்சேபத்தைக் கிளப்பி, யாகமும் அதன் குணங்களும் வேறு

வாக்கியத்திஞல் விதிக்கப்படாமை யால் - முற்கூறிய அக்நி எட்டுக் கபாலங்களில் ஸம்ஸ்கரித்தல் புரோ டாசம் ஆகிய பல விசேஷணங்களு டன் கூடிய யாகமொன்றையே விதிக் குந்தன்மை ஸித்தாந்தம் செய்யப் பட்டுள்ளது.

பகவத் பாஷ்யகாரரும் வேதார்த்த ஸங்க்ரஹத்தில், 'தத் விஷ்ணோ: பர மம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:' ஸுபால-6. (விஷ்ணுவின் அந்தப் பரம பதத்தை நித்ய ஸூரிகள் எப் போதும் பார்த்துக் கொண்டிருக்கின் றனர்.) என்ற ச்ருதியில், பரம பதம் எப்போதும் பார்த்தல் நித்ய ஸூரி கள் ஆகிய இம்மூன்றினையும் விதிப்ப தாகக் கொள்ளுமளவில் வாக்கிய பேதம் வருமென்று பயப்பட்டு எப் போதும் பார்த்துக் கொண்டிருக்கும் நித்ய ஸூரிகளோடு கூடிய பரமபத மொன்றையே விதிக்கும் தன்மையை அங்கீகரித்துள்ளனர்.

ஆகையால் 'தஸ்ய ஹ ஏதஸ்ய' என்று தொடங்கும் ச்ருதியிலும் விசித்திர நிறமுள்ளதொரு திவ்ய மான வஸ்த்ரத்தோடு கூடிய திரு மேனியை விதிக்குந் தன்மை நன்கு பொருந்தும்.

(வாக்ய பேதமாவது ஒரு வாக்கிய மானது பல வாக்கியங்களாகப் பிளவு படுதலாகும். ஒரு வாக்கியத்திலுள்ள லிங் லோட் முதலிய விதி ப்ரத்யயம் (ஏவல் விகுதி) முதலியன அவ்வாக்கி யத்தில் கூறப்பட்ட பல பொருள் களைத் தனித்தனியே விதிப்பனவாகக் கொண்டால் ஒவ்வொரு பொருளை யும் குறிக்கும் பல சொற்களோடு சேர்ப்பதற்காக விதித்தலைக் கூறும் முற்கூறிய ப்ரத்யயத்துடன் சேர்ந்த ஒரே க்ரியா பதத்தைப்(பயனிலையை) பல தடவைகள் ஆவ்ருத்தி (அடிக்கடி சொல்லுதல்) செய்ய வேண்டியிருப்ப தால் வாக்கியம் பிளவுபடும். அதுவே வாக்ய பேதமாகும். பல வாக்கியங் களால் விதிக்கப்பட வேண்டிய பல பொருள்களை - ஒரு வாக்கியத்தைத் தனித்தனியாகப் பிரித்து அவற்றின் மூலமாக விதித்தல் அவ்வாக்கியத் திற்கு அவசியமற்ற சுமையை ஏற்று தலால் இது குற்றத்தின் பாற்படும். இக்குற்றம் நேராமலிருப்பதற்காக ஒரு வாக்கியத்தில் முக்கியமான பொருள் ஒன்றும் அதன் குணங் களாகப் பலவும் கூறப்படும்போது பலவற்றுடன் கூடிய முக்கியமான தொரு பொருளையே விதிப்பதாகக் கொள்ள வேண்டும். அப்படிக் கொண் டால் அதற்கு அங்குள்ள ஏவல்விகுதி யுடன் கூடிய பயனிலை ஒன்றே போது மாகையால் வாக்கியம் பிளவுபடாமை காரணமாக வாக்ய பேதமென்னும் குற்றம் அங்கு வாராதென்பர் மீமாம் ஸகர்கள்.)

ஐயா இங்ஙனமாயின் - யதா மாஹாரஜநம் யதா பாண்டு ஆவிகம் யதா இந்த்ரகோப: யதா அக்ந் யர்ச்சி:யதா புண்டரீகம் என்று ஐந்து உபமானங்கள் கூறப்படுவதஞல் மாஹாரஜனம் போன்றதொன்று வெண்கம்பளம் போன்றது மற் றொன்று இந்திரகோபம் போன்றது இன்னொன்று அக்நி ஜ்வாலை போன் றது வேறொன்று செந்தாமரை போன் றது பிறிதொன்று என்று ஐந்து வஸ்த்ரத்தோடு கூடியது ஒவ்வொரு திருமேனியென்று ஐந்து திருமேனி களை விதிக்குந் தன்மை இசைய வேண்டியிருப்பதஞல் வாக்ய பேத மென்ற குற்றம் நீக்கவே முடியாதே என்று கேட்க வேண்டாம். இந்த ச்ருதி முற்கூறிய வேதார்த்த ஸங்க்ர ஹம் ஸ்ரீ பாஷ்யம் இவற்றின்படியே திருமேனியை மட்டும் விதிப்பதாக இசையும் பக்ஷத்திலுங்கூட, மாஹா ரஜநவஸ்திரம் போன்றதொரு திரு மேனி வெண்கம்பளம் போன்ற மற் றொரு திருமேனி என்றிவ்வாறுக ஐந்து திருமேனிகளை விதிக்கின்ற தென்று கொள்ள வேண்டியிருத்த லால் வாக்ய பேதம் ஸமானமாகை யால் வேறு வழியில்லாமல் இங்கும் நாமும் வாக்ய பேதத்தை இசை கிறேம். (வேறு வழியுள்ள விடத்தி லன்றோ வாக்யபேதம் குற்றமாவது.)

உண்மையில் ஒரே வஸ்த்ரத்திற்குப் பல பொருள்களோடு ஒப்புமை கூறும் வாயிலாகச் சித்திரவர்ணமுடைமை கூறுதலே ச்ருதி கருதியதென்று கொள்ளுதல் பொருந்துவதஞல், சித் திர வர்ணமுடையதொரு வஸ்த்ரத் துடன் கூடியதோர் திருமேனியை விதிப்பதிலேயே ச்ருதிக்கு நோக் கென்று இசைதலும் தகுமாகையால் இக்கொள்கையில் வாக்ய பேத தோஷம் நேரிட இடமேயில்லை யென்று கொள்க.

ஆக இந்த ச்ருதிக்கு - திருமேனி யைப் போலவே திவ்ய வஸ்த்ரத்தை யும் விதிக்குந்தன்மை பொருந்து தலால், இந்திரகோபம் அக்நிஜ்வாலை முதலியவற்றேடொத்த வஸ்த்ரமே பீதாம்பரமாகையால் ச்ருதியிலிருந்து இந்தப் பீதாம்பரதாரித்வமானது பர ப்ரஹ்மத்திற்குத் தனிப்பட்ட தன் மையென்று தேறிற்று.

பரப்ரஹ்மத்திற்கே ஏற்பட்ட இப் பீதாம்பர மணியுந்தன்மையானது, ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் பதி னைந்தாம் ஸர்க்கத்தில் (16 ச்லோ) 'தேவர்கள் இராவணனிடமிருந்து தமக்குப் பாதுகாப்பை விரும்பிய இச்சமயத்தில் பேரொளி படைத்த வரும் சங்க சக்கர கதைகளைத் திருக் கைகளில் ஏந்தியவரும் பீதாம்பர மணிந்தவரும் உலகங்கட்குத் தலை வருமாகிய விஷ்ணுவானவர் அவர் களருகில் வந்தார்' என்று கூறப்பட்ட தாய்க் கொண்டு அவருக்குப் பர ப்ரஹ்மமாந்தன்மையை அறிவிக்கின் றது.

(தொடரும்)

# வைகுண்டம் சென்றேன்

திருமலைக்குச் செல்வோர் தினமும் திருக்கூட்டம்
ஒருமலைக்கு ஒருமலை வழியெலாம் தொடர்க்கூட்டம்!
பாற்கடலில் படுத்திருந்த பழக்கத்தால் இன்று
மக்கள் ஊர்க்கடலில் மூழ்கித் திளைக்கின்றாயோ திருமாலே?

படியேறிச் சென்றுத் திருமலைக்கு வந்துவிட்டேன்
முடியிறக்க எண்ணி சட்டையைக் கழட்டி
மடியினில் காசெடுத்தால் "மொட்டை இலவசமென்றார்"!
தடுமாறினேன் ஓர்கணம் நடந்தது உண்மை!

திருக்குளத்தில் நீராட நான் சென்றபோது
தெருக்குழாய்கள் தென்பட்டது குளத்தின் ஒருபுறம்
உருக்கமுடன் உன்பேர்பாடி குளமோ குழாயோ
பெருக்கெடுத்தக் குளிர்நீரில் குளித்து மகிழ்ந்தேன்!

நீராடி மகிழ்வோடு உலரா உடையோடு
போராடிக் கோபுர வாசல்கண்டு நானங்கே
வேங்கடவா உனைக்காண நேரில் வந்தால்
வைகுண்டம் காட்டி வழிமறைத்து நிற்கின்றார்!

வைகுண்டம் தான்உன் இருப்பிடம் அறிவேன்
வரிசைக்கு நிற்கஓரிடம் வைகுண்டம் பின்பறிந்தேன்!
பாம்பின்மேல் நீபடுத்த நினைவால் அங்கே
பாம்புபோல் வளைந்து வளைந்து வருகின்றோம்!

வந்துவிட்டேன் எப்படியோ உன்னருகே மகிழ்கின்றேன்
சிந்துகின்ற உன்ஒளிப் பார்வையில் நான்
முந்துகின்றேன் அருள்பெற 'கோவிந்தா' என்று
உந்துகின்றார் உன்காவலர் என்னைப் பின்னிருந்து!

உணர்கின்றேன் உனக்காக ஆயிர மாயிரம்பேர்
திணறுகின்றார் வரிசையில் தினம் தினம்
மனதாரக் கண்டு ஆராதிக்க எண்ணினேன்
ஆராதிக்க இயலும் ஆரத்திமட்டும் இல்லையங்கே!

காசினை உண்டியில் பக்தியோடு போட்டேன்
மாசினைத் துடைத்த மகிழ்ச்சியில் கையினில்
நெய்ஒழுகத் தந்தனர் தித்திக்கும் பொங்கலை
மெய்உருக உண்டே நான் வெளிவந்தேன்!

இலவச உணவுச்சீட்டோடு உணவகம் சென்றேன்
கனவுலகம் சென்றதுபோல் அதிர்ந்து விட்டேன்,
நினைவுலகில் நிறைவான உணவைக் கண்டு!
வைகுண்டம் தானே அது அங்கே வறுமை ஏது?

திரு. கே. ஜெகதீஷ்-சென்னை.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 1

நாம் இப்பொழுது பகவத் கீதையின் இறுதி அத்யாயத்தை அடைந்து விட்டோம். ஒரு நூலில் பொதுவாக முதல் அத்யாயமோ அல்லது இறுதி அத்யாயமோ புத்தகத்தின் சுருக்கமாக அமையும். அந்த அடிப்படையில் இதுகாறும் பதினேழு அத்யாயங்களில் பகவான் சொன்னதன் தொகுப்புரையாக இந்த அத்யாயம் அமைகிறது என்றால் அது மிகையாகாது. இதற்கு முன் பகவான் பல இடங்களில் 'ஸன்யாஸம்', 'தியாகம்' என்ற சொற்களைப் ப்யன்படுத்தி இருக்கிறார். அவற்றை அடிக்கடி கேட்ட அர்ஜுனனுக்கு ஒரு சந்தேகம் மனதில் உதிக்கிறது. அது ஒரு கேள்வியாக மலர்கிறது. அதுவே இந்த அத்யாயத்தின் முதல் சுலோகமாக அமைகிறது.

ஸன்யாஸஸ்ய மஹாபாஹோ
தத்வமிச்சாமி வேதிதும் |
த்யாகஸ்ய ச ஹ்ரிஷீகேச
பிருதக் கேசிநிஷூதன || (18-1)

'ஹ்ருஷீகேசா! நீண்ட புஜங்களை உடையவரே! கேசி என்னும் அரக்கனை அழித்தவரே! ஸன்யாஸத்தினுடையவும் தியாகத்தினுடையவும் உட்பொருளைத் தனித்தனியே தெரிந்து கொள்ள விரும்புகின்றேன்".

மோட்ச ஸன்யாஸ யோகம் என்று இந்த அத்யாயம் அழைக்கப்படுகிறது. வாழ்வின் இறுதி இலட்சியம் மோட்சத்தை அடைவதாகும். மோட்சம் என்ற வார்த்தைக்கு விடுதலை என்ற பொருளும் உண்டு. எதிலிருந்து விடுதலை? இவ்வுலகில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, அறியாமையிலிருந்து, துன்பத்திலிருந்து, துக்கத்திலிருந்து, கவலையிலிருந்து, இன்ப துன்பங்களின் பாதிப்பிலிருந்து, வெற்றி, தோல்விகளின் தாக்குதல்களிலிருந்து விடுபடுவதுவே உண்மையான மோட்சம். எதுவரினும் அதை இறைவன் தரும் பிரஸாதமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தை நாம் பெற்று விட்டோமென்றால் நாம் மிகச் சிறந்த யோகநிலையை அடைந்து விட்டதாகக் கொள்ளலாம். அதை அடைவதற்கு ஸன்யாஸம் உதவுகிறது. 'ஸன்யாஸம்' என்ற வார்த்தையைக் கேட்டதும் நம் மனக்கண் முன் காவியுடை, மொட்டைத்தலை அல்லது ஜடாமுடி, கமண்டலம், கையில் பிக்ஷைப் பாத்திரம், மலைக் குகைகள் இத்தகைய காட்சிகள் எல்லாம் தோன்றும். இத்தகைய ஸன்யாஸத்தை எல்லோரும் அடைய முடியுமா? இதுதான் உண்மை ஸன்யாஸமா? அல்லது அதற்கு வேறு பொருளும் உண்டா? இந்த கேள்விகளுக்கான பதிலைப் பகவான் இந்த அத்யாயத்தில் தருகிறார்.

ஸன்யாஸம், தியாகம் என்ற சொற்களை நாம் பொதுவாக ஒன்றாகவே கருதுகிறோம். ஆனால் அவற்றிற்கிடையே வேறுபாடு உண்டு. பகவான் ஸன்யாஸத்தைப் பற்றி அத்.5- அத். 13- அத். 9- அத். 28 போன்ற இடங்களிலும், தியாகத்தைப் பற்றி அத். 4- அத். 20- அத். 12-அத். 11- போன்ற இடங்களிலும் பகர்ந்திருக்கிறார். நமது இதிகாச, புராணங்களில் இவை இரண்டிற்கும் மிக உயர்ந்த ஸ்தானம் தரப்பட்டிருக்கின்றது. இவை தொடர்பான நடைமுறை வாழ்வில் நம் அனைவருக்கும் ஏற்ற ஒரு அரிய கொள்கையைப் பகவான் அளிக்கிறார்.

இந்த சுலோகத்தில் பகவானை அர்ஜுனன் 'ஹ்ருஷீகேசா, கேசி நிஷூதனா, மஹாபாஹு' போன்ற சொற்களால் அழைக்கிறான். அவற்றின் தத்துவம் என்ன?

கேசி என்ற அசுரன் குதிரை வடிவம் கொண்டு பகவான் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல வாயைத் திறந்து கொண்டு வந்தான். மாயக் கண்ணனோ தன் கையை அந்தக் குதிரையின் வாயினுள் விட்டு வயிற்றினுள் செலுத்திக் குடலைக் கசக்கிக்கொன்று விட்டான். அதனால் அவனுக்குக் கேசி நிஷீதனன் என்ற பெயர் வந்தது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

தீமையை அழிப்பதில் பகவானது பால்ய பருவ ஆற்றலை இது விளக்குகிறது. கைவலிவை இங்கு அவர் காட்டியதால் மகாபாஹு எனப்படுகிறார். இத்தனை செயல்களுக்கிடையில் பகவான் இந்திரியங்களுக்கு வசப்படாதிருந்தமையால் ஹ்ருஷீகேசன் என்றழைக்கப்படுகிறார். பகவான் சீரிய தியாகியாகவும், 'ஸன்யாஸி' யாகவும் விளங்கினர். நாமும் உலகியல் வாழ்வுக்கிடையில் அவரைப் போல் விளங்க முடியும் என்பதை இனிவரும் சுலோகங்களில் விளக்க இருக்கிறார்.

ஸன்யாஸம், தியாகம் ஆகிய இரண்டிற்குமிடையில் உள்ளவேறுபாட்டை விளக்கும் வகையில் பகவான் பகருகிறார்:

காம்யானும் கர்மணும் ந்யாஸம்
ஸன்யாஸம் கவயோ விது: |
ஸர்வ கர்மபல த்யாகம்
ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: ||
(18-2)

'ஆசையின் பால்பட்ட கர்மங்களைத் துறப்பதை ஸந்யாசமென அறிஞர்கள் அறிகிறார்கள். அனைத்துக் கர்மங்களின் பலனை விடுவதைத் தியாகமென்று தீர்க்கதரிசிகள் பகர்கின்றனர்.'

செய்யும் செயல்களைப் பொதுவாக இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று காம்ய தர்மம், மற்றது நிஷ்காம்ய கர்மம். ஆசையின் பால்பட்டு, சுய நலத்தால் தூண்டப்பட்டுச் செய்யப்படும் கர்மங்கள் யாவும் காம்ய கர்மங்கள் ஆகின்றன. பட்டம், பதவி, புகழ் வேண்டும், தன் மனைவி மக்கள் சுகமாக இருக்க வேண்டும், பல தலைமுறைக்குப் போதுமான பொருள் சேர்க்க வேண்டும் என்பன போன்ற சுயநலத்துடன் கூடிய ஆசைகளால் தூண்டப்பட்டு நாம் தினந்தோறும் எத்தனை எத்தனை காரியங்களைச் செய்கின்றோம். அத்தனையும் காம்ய கர்மங்களாகின்றன. மாறாக சுயநலம் இன்றிச் செய்யப்படும் கர்மங்களும் நிறைய இருக்கின்றன. தனக்குப் பெயர், புகழ் எதையும் விரும்பாது, பிறரது நலத்துக்காக என்று சத்திரம், ஆஸ்பத்திரி, பள்ளி, கல்லூரிகள் போன்றவற்றைக்கட்டி நடத்துவது நிஷ்காம்யகர்மங்கள் ஆகின்றன. சுயநலத்துடன்கூட செய்யப்படும் செயல்களே ஒருவினைப் பந்தத்திற்குள்ளாக்கும். நிஷ்காம்யமாகச் செய்யப்படும் கர்மங்கள் தனக்கென்று ஆசை இல்லாத காரணத்தால் நம்மைப் பந்தப்படுத்தமாட்டா. 'காம்ய கர்மங்களை விடுவதுதான் ஸன்யாஸம்' என்று பகவான் இந்த சுலோகத்தில் கூறுகிறார். அதை இவர் தான் கூறுவதாகச் சொல்லாமல் சில ஞானிகள் கூறுவதாகக் கூறுகிறார். என்னே பகவானது பணிவு, அடக்கம்! மற்றும் சில ஞானிகள் காம்ய கர்மங்கள் மட்டுமல்லாது, நித்திய நைமித்திக கர்மங்கள் போன்ற அனைத்தினுடைய பலனை விட்டுவிடுவதுதான் தியாகம் எனக் கூறுகின்றனர்.

நாம் செய்யும் ஒவ்வொரு காம்ய கர்மமும் பூமியில் நாம் விதைக்கும் விதைக்கு நிகர். விதை முளைத்துச் செடியாவது போல், ஒவ்வொரு செயலும் பலனை அளிக்கிறது. பிறகு மேலும் பல புதிய செயல்களை செய்கிறோம். இப்படி வினை-வினைப்பயன்-புதிய வினை என்ற சக்கரம் சுற்றிக் கொண்டே இருக்கிறது. எனவே இத்தகைய காம்ய கர்மங்களை விடுவதுதான் ஸன்யாஸம் என்பது சில ஞானியரது கருத்து. பிறவிப் பெரும்பிணி வேண்டாமென்று கருதும் அதற்குப் புதிய வித்துக்களை விதைப்பதில்லை. ஏற்கெனவே முன் வினைப் பயனால் வந்திருக்கும் இவ்வுடல் தானாகப் பட்டுப் போகட்டும் என்று அத்தகையவர் விட்டுவிடுவர். மேலும் சிலர் புதிய மரத்துக்கான விதை எதையும் நாம் நட வேண்டாம், அதே சமயத்தில் பழைய மரத்தையும் விட்டு வைக்க வேண்டாம் என்று கருதுகின்றனர்.

தியாகம், ஸன்யாஸம் என்ற இரண்டு வார்த்தைகளும் கல், காக்கை அல்லது மரம், மலை போன்ற முற்றிலும் வேறான பொருள் தரும் வார்த்தைகள் அல்ல. இரக்கம், பரிவு அல்லது அறிவு, ஞானம் போன்று ஒன்றோடொன்று தொடர்பு உடைய சொற்கள் அவை.

'சத்வ குணமுள்ளவர்களுககுக் கருமங்கள் செய்ய வேண்டிய அவசியமில்லை. அவர்களை விட்டு கர்மங்கள் தாமாகவே விலகி விடுகின்றன. வலிய முயன்றாலும் அவர்களால் கர்மம் செய்ய முடியாது. கர்ப்பமாயிருக்கும் மருமகப்பெண் வீட்டு வேலைகளிலிருந்து சிறிது சிறிதாக விடுவிக்கப்படுகிறாள். குழந்தை பிறந்த பிறகு அவள் முழுக்கவனத்தையும் குழந்தையைப் பராமரிப்பதிலேயே செலுத்தும்படி விடப்படுகிறாள். அதுபோல ஸத்வ குணமுள்ளவர்களது கருமங்களையும், பகவான் அகற்றி விடுகின்றார்', என்பது ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரது வாக்கு.

செல்வந்தர் வீட்டில் பணியுரியும் வேலைக்காரி ஒருத்தி அந்த வீட்டுக்காரரின் குழந்தையைத் தன் குழந்தையாகப் பாவித்து, 'என் கண்ணே, மணியே', என்று கொஞ்சுகிறாள். அந்த வீட்டை, 'என் வீடு', என்று பெருமையுடன் கூறிக்கொள்கிறாள். எல்லாம் எதுவரை? அந்த வீட்டில் வேலைக்காரியாக இருக்கும் வரை. அப்படி இருக்கும் வேளையில் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் குடிசை தான் தன் சொந்தவீடு என்ற எண்ணம் அவள் மனதை விட்டு அகலுவதேயில்லை. அதைப் போல 'கர்மேம் காம், முக மேம் ராம்-கையால் வேலை, வாயால் ராம நாமம்' - என்பதுவே உண்மையான கர்மயோகி மற்றும் பக்தனின் நிலையாகும்.

எந்தக் கர்மத்தைச் செய்தாலும் ஏதாவது விளைவு உண்டாகுமே. அது பந்தப்படுத்துமே. எனவே கர்மத்தைச் செய்வதா, விடுவதா என்ற கேள்வி எழும் அல்லவா. இதற்கான விடை அடுத்த சுலோகத்தில் வருகிறது.

(தொடரும்)



# ஆயுத பூஜை

திரு. கே. இராமநாதன்—சேலம்.

தழைத்து விளங்கும் ஆலமரம் போல் விளங்குவது நம் இந்து மதம். பழம பெருமையும், சிறப்பும் மங்காமல் இது இன்றளவும் சிறந்து விளங்குவதற்குக் காரணம் என்ன? இயற்கையின் இணையற்ற சக்தியை உணர்ந்த நம் முன்னோர்கள் அதைத் தெய்வமாய் எண்ணி வழிபடலாயினர். அவ் வழிபாட்டை நடத்துவதற்கெனக் குறிப்பிட்ட நாளையும் அமைத்தனர். அந்நாட்களில் தெய்வங்களுக்கு விழா எடுத்து மகிழ்வுடன் கொண்டாடிக் களித்தனர்.

அறியாத ஊருக்குச் செல்லும் போது வழிகாட்டி ஒருவனின் துணை இருப்பின் செல்லவேண்டிய இடத்தை எளிதில் அடையலாம். அதுபோல நம் முன்னோர்கள் தாம் மேற்கொண்ட வாழ்க்கைப் பயணத்தில் வழிகாட்டியாய் இறைவனைக் கொண்டனர். இதுவே இந்து மதத்தினர் இன்றளவும் பின்பற்றி வரும் கொள்கை. எனவேதான் இந்து மதம் புகழ் மங்காமல் ஒளி வீசித் திகழ்கின்றது.

தெய்வத்தையே முதன்மையாய்க் கொண்ட மனிதன் ஆயுதங்களை வழிபடுவது ஏன்? ஆயுத பூசை என்று விழா கொண்டாடுவது ஏன்? எனும் வினாக்கள் நம் உள்ளத்தே எழுவது இயற்கை.

வாழ்க்கைப் பாதையின் வழிகாட்டியாய் இறைவனைக் கொண்ட நம் முன்னோர்கள் அப்பாதையில் ஏற்படும் இன்னல்களையும், இடையூறுகளையும், எதிர்ப்புகளையும் சமாளிக்க வேண்டி ஆயுதங்களைக் கொண்டனர். சமுதாயச் சூழலில் ஏற்பட்ட ஆபத்துக்களிலிருந்து அவர்களைக் காத்தது அவ்வாயுதமே. தம் உயிரைக் காத்த அவ்வாயுதங்களை அவர்கள் போற்றி மகிழ்ந்ததில் வியப்பேதும் இல்லை. அவைகளைப் போற்றியதுடன் நின்றுவிடாமல் தாம் வணங்கும் தெய்வத்துடன் சேர்த்தே வழிபடலாயினர்.

முக்கண்ணனும் சிவனுடன் திரிசூலத்தையும், பாற்கடல் வாகனை பரந்தாமனுடன் சுதர்சன சக்கரத்தையும, தேவர் தலைவனை இந்திரனுடன் சக்ராயுதத்தையும், மானுடத் தெய்வம் என்ற சிறப்பினை உடைய இராமபிரானுடன் வில்லையும், அனுமனுடன் தண்டாயுதத்தையும், பரசுராமனுடன் கோடாலியையும், துர்க்கா தேவியுடன் சூலத்தையும் சேர்த்து வணங்கினர்.

தசரா திருவிழா என்பது முற்காலத்தில் வீரர்கள் தாம் பயன்படுத்தும் ஆயுதங்களைப் பூசித்து வணங்குவதற்கான நாளாய்க் கொண்டாடி வந்தனர். அவ்வாறு அவர்கள் பூசிப்பதற்கென மனித வடிவினை ஒத்த உயரமான அலங்கரிக்கப்பட்ட வாட்களைப் பயன்படுத்தினர். அதனை அவர்கள் 'ஆயுத புருஷ்' என்றழைத்தனர். அவ்வாறு அவர்கள் நடத்தி வந்த விழாவே இன்றளவும் சில, பல மாற்றங்களுடன் ஆயுத பூசை எனும் பெயரில் கொண்டாடப்பட்டு வருகின்றது.

முடியுடை மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் 'தனுர் வித்யா' எனப்படும் வில்வித்தையே சிறப்பும், மதிப்பும் பெற்றதாய் இருந்தது. அக்காலத்து மக்கள் போரிலும் நெறிமுறைகள் வகுத்து,அவை பிறழாது போரிட்டனர். வில்லே தலைசிறந்த ஆயுதமாய் அன்று விளங்கியது. மிருதுவான வளையும் தன்மை கொண்ட மூங்கிலால் செய்யப்பட்ட வில்லே சிறந்ததாகக் கருதப்பட்டது. ஏனெனில் இவைகளில் அம்பை வைத்து எய்தால் வெகுதூரம் வரையிலும் செல்லும். எஃகு வில்லும் பயன்படுத்தினர். பொதுவாக வில் நான்கடியாய் இருக்கும். வில்லின் நாண் மான் அல்லது எருமையின் நரம்புகளால் அமைக்கப்பட்டது.

சிவபெருமான் வைத்திருக்கும் வில்லை 'பினாக்' என்றும், அர்ஜுனனின் வில்லை 'காண்டீபம்' என்றும் இந்திரனின் வில்லை 'விஜய்' என்றும் விஷ்ணுவின் வில்லை 'சிருங்' என்றும் அழைத்தனர்.

மன்னர்கள் போரில் பயன்படுத்திய ஆயுதங்களுள் போர் வாளுக்குத் தனியிடம் உண்டு. போர் வாள் தோன்றியதற்குக் கதை ஒன்று வழக்கில் உள்ளது. தேவர்களும், அசுரர்களும் ஒருமுறை கடும் போர் புரிந்தனர். போரில் அசுரர்களே வெற்றியை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். தோல்வியைத் தழுவிக் கொண்டிருந்த தேவர்கள் பிரம்மதேவனை மகிழ்விக்க வேண்டி யாகம் ஒன்றை இயற்றினர். அச்சமயத்தில் யாக குண்டத்தின் நடுவே ஒளிப் பிழம்பு ஒன்று தோன்றியது. தேவர்கள் இவ்வொளியையே வாளாக்கி அசுரர்களை மாய்த்து வெற்றியைச் சூடினர்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் போர் வாளுக்குத் தனிச்சிறப்பு செய்தனர். மன்னர்களின் வீர வாழ்க்கையைப் பற்றிக் கூறும் 'புறப்பொருள் வெண்பா மாலை' எனும் நூலின் மூலம் மன்னர்கள் வாளுக்குச் செய்த சிறப்பினை அறியலாம். 'வாள் நிலை' 'வாள் மண்ணுமங்கலம்' எனும் துறைகள் இதற்குச் சான்

றாய் விளங்குகின்றன. வாள் நிலை என்பது, மன்னன் பகைவர் நாட்டின் மீது போர் தொடுக்க எண்ணும் போது ஒரு நல்ல நாளில், வெற்றியைக் குறிக்கும் முகமாகத் தன் வாளைப் புற வீடு செய்தனுப்புவான். அதேபோல் வாள் மண்ணுமங்கலம் என்பதாவது, போரில் பகைவரை வென்ற மன்னன், வெற்றி தேடித் தந்த வாளைப் புனித நீரில் குளிப்பாட்டும் செயலாகும்.

வாளுக்கு மக்கள் அளித்த சிறப்பிற்குச் சான்றாகப் பிறிதொரு நிகழ்ச்சியும் உள்ளது. மணம் நிச்சயிக்கப்பட்ட வீரனொருவன், மண நாளன்று வீடு திரும்பாமல் போர்க்களத்தே தங்க நேருவதுண்டு. அச்சமயத்தில் அவன் தன் வாளில் கையெழுத்திட்டு அதனை மண வீட்டிற்கு அனுப்புவான். அவ்வாளையே மணமகளாகக் கொண்டு திருமணச் சடங்குகள் நிறைவேற்றப்படும்.

பொதுவாக மன்னர்கள் வாள் வீச்சில் சிறந்தவர்களாய் விளங்கினர். முகலாய மன்னர்கள் வளைந்து விளங்கும் வாட்களையே அதிகம் பயன் படுத்தினர். சீக்கியர்களின் ஏழாம் குருவான ஹர்கோவிந்சிங் எப்போதும் இரண்டு வாட்களுடன் காட்சியளிப்பார். இராணி துர்க்கா தேவி தன் முதுகில் பச்சிளம் குழந்தையைச் சுமந்து கொண்டு கையில் வாளுடன் போர்க்களம் புகுந்தாள். அக்பரின் படைத் தளபதியான அப் சல்கானை எதிர்த்து வீரப் போர் புரிந்தாள். இறுதியில் தோல்வியைத் தழுவ நேரிட்டபோது தன் வாளாலேயே தன் குழந்தையைக் கொன்று தன்னையும் மாய்த்துக் கொண்டு வீர சுவர்க்கம் அடைந்தாள்.

வாட் போரில் வல்லவனான திப்பு சுல்தான் தன் வாழ்நாளின் இறுதிப் போரிலும் ஆங்கிலேயர்களை எதிர்த்து வாளையே நிமிர்த்தினன். அந்தோ பரிதாபம்! அப்போரில் ஆங்கில சிப்பாய் ஒருவன் தன் துப்பாக்கியால் திப்புசுல்தானைச் சுட்டான். திப்புவின் உயிர் அவனது உடலைவிட்டு நீங்கியபோதிலும் அவன் பற்றியிருந்த வாள் அவனது கையைவிட்டு நீங்கவே இல்லை.

மராட்டிய வீரன் சிவாஜி என்றதும் நம் நினைவிற்கு வருவது கையில் வாளேந்திய கம்பீரமான உருவமே. வீர சிவாஜிக்கு, அவன் வணங்கிய பாவனி அன்னை வாள் தந்து அருள் செய்தாள் என்பர். இன்றும் மராட்டிய மாநிலத்தில் சிவாஜியின் வாள் என ஐந்து வாட்கள் உள்ளன.

போர்க் களத்தில் வீரர்கள் நெறி முறை பிறழாமல் போரிட்டனர். விற்படை தாங்கிய வீரர்கள் பகைவரின் படையோடும், வாள் தாங்கிய வீரர்கள் வாள் வீரர்களோடும் போரிட்டனர். இதற்கு உதாரணமாக இராமன் இராவணனுடன் மோதும் போது இரத்தினக் கற்கள் பதிக்கப் பட்ட வாளுடன் வந்தார். எனவே இராவணனும் தன் வில்லையும், அம்பையும் போட்டுவிட்டு வாளுடன் போரிட வந்தான்.

வாட்போரில் பல குறிப்புக்களும், சங்கேதங்களும் கையாளப்பட்டன. வாளைப் போர்க்களத்தில் உயர்த்தினால் யுத்தம் தொடங்கலாம் என்பது பொருள். வாளைக் குனிந்து நிலத்தின் மீது வைத்தால் தோல்வியை ஒப்புக்கொண்டதாகும். வாட்படை வீரர்கள் வாளை முத்தமிட்டு உறுதிமொழியை எடுத்துக் கொள்வர்.

இவ்வாறு நம் முன்னோர்களின் வாழ்வில் ஆயுதங்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்று விளங்கியதை அறியலாம். தம் வாழ்வைக் காக்கும் அவ்வாயுதங்களை அவர்கள் தெய்வத்திற்கு இணையாக ஏற்றிப் போற்றியதில் வியப்பேதும் இல்லை. தாங்கள் வணங்கும் தெய்வங்களுக்கு விழா எடுப்பது போல, அவர்கள் ஆயுத வழிபாட்டிற் கெனவும் ஒரு நாளை ஒதுக்கி வழிபாடு நடத்தினர். பலப்பல தலைமுறை கடந்தபோதும் இவ்வழிபாடுகள், தெய்வீக வழிபாடுகள் மாறவேயில்லை. அவ்வாயுத வழிபாடே இன்று ஆயுத பூசை எனும் பெயரில் தங்கள் வாழ்க்கையில் உறுதுணையாக இருக்கும் தொழிற் கருவிகளுக்கும் மதிப்பு அளிக்கும் வகையில் அவைகளை வணங்கும்முகத்தான், தமிழகம் மல்லாது இந்தியாவெங்கிலும் உள்ள மக்கள் இவ்வாயுத பூஜையை கொண்டாடி மகிழ்கின்றனர். ★

# கபீர்தாசர் காட்டும் கடவுள்

சேலம் அன்பரசு

"திருமால் வாழ்வது எந்தன் நாவில்
நாரா யணனென் கண்ணில்
வாழ்வான்
இதயம் தன்னில் கோவிந்தன்
இருப்பான்
இறுதிக் கணக்கை சாவுகேட்கையில்
கோவிந்தா என்னும் முறையிடு
செய்வேன்"

என்பது ஞானி கபீர்தாசனின் வாக்கு. இவரைப் பற்றிய கதைகள் பாரதம் எங்கும் பலவாறு பேசப்படுகின்றன. இவரது வரலாறு 'மகாபக்த விஜயம்' என்னும் நூலில் சேர்க்கப்பட்டுள்ளது.

கபீர்தாசரின் அபூர்வ ஆற்றலைக் கண்டு வியந்தவர்களுள் கோரக்நாதர், ஸர்வானந்தர் குறிப்பிடத் தக்கவர்கள்.

கபீர்காலத்தில் வாழ்ந்து, அவருக்குப் பல கொடுமைகளைச் செய்தவனுகக் கருதப்படும் தில்லி பாதுஷா சிக்கந்தர் ஷாவின் காலம் கி.பி. 1488 முதல் 1512 முடிய ஆகும்.

என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா, கபீரின் காலம் கி.பி. 1398? முதல் 1518 என்று கூறுகிறது.

தமிழகஅரசு தயாரித்த கலைக்களஞ்சியம் கபீர் காலம் கி. பி. 1440முதல் 1518 என்று கூறுகிறது.

நீரு, நீமா ஆகிய இஸ்லாமியத் தம்பதியரின் வளர்ப்புக் குழந்தை தான் கபீர் என்று தெரிந்திருந்தும் இராமானந்தர் அவரைச் சீடராக ஏற்றுக்கொண்டதன் காரணம் அவருடைய சிறந்த நடவடிக்கையாகத் தான் இருக்கமுடியும்.

இராமானுசருடைய விசிட்டாத்துவைதக் கொள்கையை, அவருக்குப் பிறகு 400 ஆண்டுகள் கழித்து வட இந்தியாவில் பரவச் செய்தவர் இராமானந்தர். "பக்தி இயக்கம் திராவிட நாடாகிய தமிழகத்தில் பிறந்து, இராமானந்தரால் வட இந்தியாவிற்குக் கொண்டு செல்லப்பட்டது. கபீர் தாசர் அதனை ஏழ்கடல்களிலும், ஒன்பது கண்டங்களிலும் பரவச்செய்தார்" என்று திரு. குஸ்வந்த்சிங் தமது சீக்கிய வரலாறு என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

கபீர்காலம் மிகவும் குழப்பம் வாய்ந்தது. இருந்தபோதிலும் அந்நியர் ஆதிக்கமும், ஊடுருவலும் இந்திய மக்களின் ஆணிவேராக விளங்கிய பண்பாட்டினை அழிக்க இயலவில்லை.

வைதீக இஸ்லாமியர் 'கடவுள் ஒன்று' என்னும் கொள்கையை நம்பினர். அவர்களிலிருந்து கிளைத்த 'சூபிக்கள்' என்போர் இந்து பக்தர்களை நாடி வந்து ஆடிப்பாடி இறைவனை வழிபடுவதை விரும்பினர். இஸ்லாமியர்கள் தமது சமயத்தை நம்பாதவர்களையும் அவர்களுடைய வழிபாட்டுத்தலங்களையும் நாசமாக்கிய காலத்தில் சூபிக்கள் இந்துக்களைத் தமது இல்லங்களுக்கு அழைத்துச் சென்று உடன் பிறப்பென்னும் நினைப்புடன் தழுவிக்கொண்டனர்.

கபீர்தாசர் ஒரு கவிஞராக இருந்தைப்போலவே ஓர் இசை வாணராகவும் இருந்துள்ளார். கூடாரங்கள் செய்யும் தொழிலை மேற்கொண்டிருந்த பால் (Paul) செருப்புத்தொழிலாளியாகிய போமே (Boehme), பாத்திரங்கள் செப்பனிடும் தொழிலாளியாகிய பண்யன் (Bunyan), நாடாத் தொழிலாளியாக விளங்கிய தெர்ஸ்டீஜன் (Tersteegen) ஆகியவர்களைப் போலவே, தமது நெசவுத் தொழிலைச் செய்து கொண்டே கபீர் கவிதைகளை இயற்றவும் தெரிந்து வைத்திருந்தார் என்று கபீர் வாழ்க்கை வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதிய 'எவலின் அண்டர் ஹில்'(Evelin Under Hill) என்பவர் குறிப்பிடுகிறார்.

கபீர்தாசர் தாம் உணர்ந்த இறைவனுக்கு 'இராம்' என்று பெயரிட்டார். ஆகவே இஸ்லாமியர் அவரை வெறுத்தனர். இராமானுசரை தழுவிய வைணவராக இராமானந்த விளங்கியதால் கபீரும் அந்த வழியினராகத்தான் இருந்திருக்க வேண்டும்.

"ஏடும் எழுத்தாணியும் தொடாத
காசியில் வாழும் ஏழை நெசவாளி
கபீர்"

என்று தம்மைக் கூறிக்கொள்பவர், வேதங்கள், உபநிஷத்துக்கள், சாத்திரங்கள், புராணங்கள், குரான் ஆகிவற்றின் உட்பொருளை அறிந்தவராகக் காணப்படுகிறார். அவருடைய கவிதைகளில் உரிய ஓசையும், உவமையும், உருவகமும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

வேத சாத்திரங்களையும், குர்ஆனையும் கபீர்தாசர் வெறுப்பது போல நமக்குத்தோன்றலாம். கபீர்தாசரின் கவலை எல்லாம் அவற்றைக் கற்றவர்கள், அவை கூறும் வழியில் நடக்கவில்லையே என்பதுதான். தீர்த்த யாத்திரைகளை அவர் வெறுத்த காரணம், அவை மக்களால் சரியாக உணரப்படவில்லையே என்பதுதான்.

முழு முதற்பொருளாகிய இறைவனை கபீர் எவ்வாறு அடையாளம் காட்டுகிறார் என்று பார்ப்போம். முழுமுதற் பொருளை, "படைப்போர் இல்லாப் பரம்பொருள்" என்றும்,

" நுண்ணுயிர் இருப்பது பிரம்மத்தின் உள்ளே
பிரம்மம் இருப்பதோ நுண்ணுயிர் உள்ளே
பிரம்மம், உயிரினம் இரண்டிலும் அவனே
சுயமாம் மனதுடன் திகழு கின்றவன்"
என்றும்,

" ஓமில் இருந்தே அனைத்துப் பொருள்களும்
தோன்றின; அவன்உடலும்
அன்பின் வடிவம் ஆகிடும் ஐயா
நிறம், உரு, அழிவு இல்லான் "
என்றும் அறிமுகப்படுத்துகிறார்.

பிரம்மம் வேறாகவும், படைப்புகள் வேறாகவும் நமக்குத் தோன்றினாலும் இரண்டும் ஒன்றே என்பது கபீர் கொள்கை.

" அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும்அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே "

என்னும் திருமூலருடைய பாடலை கபீர் பாடல்களோடு ஒப்பு நோக்கத் தக்கது.

பக்தனுடைய இல்லம் நான்கு தூண்களால் ஆக்கப்பட்டது என்பது ஒரு நம்பிக்கை. பக்தி=வழிபாடு; பக்தன்=வழிபடுவோன்: பகவந்தன்= இறைவன்; குரு=ஆசான். இதன் காரணமாகவே கபீர் தமது குருவாகிய இராமானந்தரின் பெயரை இறுதி வரை விடாமல் இருந்தார்.

ஒருவருடைய அறியாமையைநீக்கி, ஒளியை ஊட்டி, இறைவனை அடையும் வழியைக் காட்டக் கூடியவர் எவரோ அவரே 'குரு' ஆவார். உண்மைக் குரு எத்தன்மை உடையவர் என்பதைக் கபீர் கவிதைகள் நமக்குக் காட்டுகின்றன.

" அறிந்திடாப் பொருளினை அறிந்திடச் செய்யும்
உண்மைக் குருவின் கருணையேஆகும்
கால் இன்றி நடக்க, கண்ணின்றிப் பார்க்க,
காதின்றிக் கேட்க, வாயின்றிப்பருக,
சிறகின்றிப் பறக்கக் கற்றேன் குருவிடம்'
என்னும் வரிகளும்,

" உண்மை அன்பினைக் கோப்பையில் நிரப்பித்
தானும் உண்டு, எனக்கும் தந்த
உண்மைக் குரு "

" கண்ணில் இருக்கும் திரையைஅகற்றிப்
பிரம்ம தரிசனம் காட்டினான் அவனே"

என்னும் வரிகளும் குருவின் பெருமையைப் பறை சாற்றுகின்றன.

அறிவு ஒன்றினால் மட்டும் இறைவனை உணர முடியாது என்பது கபீர் கொள்கை. இதனை தமது பாடலில்,

" அறிவினால் அவனை உணர்ந்திட நம்பிடும்
அனைவரும் கண்ணிலாக் கபோதிகள் "

என்று குறிப்பிடுகிறார்.

அப்படியானால் இறைவனைக்காணும் வழிதான் யாது என்பதற்குக் கபீர் கூறும் வழி 'எளிய பக்தி' (சகஜ யோஹ்) என்பதுதான்.

" எளிய பக்தியே சிறந்தது ஐயா
பக்தியின் பாதையை விளக்கஒண்ணாது
கேட்பதும், கேளாததும் அங்கு இல்லை
அவனது பாதம் அடைந்திடும் ஒருவர்
தன்னலம் தன்னைப் பேணுவதுஇல்லை"

என்று கூறிவிட்டு, வேறொரு பாடலில் இறைவனிடம் முறையிடும் போது,

" உந்தன் பக்தரை மாந்தரில் காண்பது
அரிதினும் அரிதே; காமக் குரோத,
லோப மோகமாம் தீய குணங்களை
விட்டவன் அறிவான் விமலன்தன்னை'

என்று உண்மைப் பக்தரை அடையாளம் காட்டுகிறார்.

" கண்களும் காதுகளும்
மூடவுமில்லை; உடலை வருத்தவில்லை
புன் சிரிப்புடனே
கண்களைத் திறந்து பார்க்கிறேன் எங்கும்
'அவனது' அழகினையே "

இது போன்ற பல கருத்துக்களை அவரது கவிதைகளில் ஆங்காங்கே காணலாம்.

இறைவனை வழிபடும் பெரியோர், தமக்கும் இறைவனுக்கும் பல உறவு முறைகளைக் கற்பித்துக் கொண்டு பாடி வழிபட்டுள்ளனர். அவ்வழிகள் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. இவை முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும்.

மேற் கூறப்பட்ட முறைகளைத் தவிர 'நாயகன்-நாயகி' என்னும் முறையில் இறைவனைத் தலைவனாகவும்,தம்மைத் தலைவியாகவும் வைத்துப் பாடிய கவிஞர் பலர். நாராயணன் மட்டுமே ஆண்மகன் (புருஷன்) மற்ற அனைவரும் பெண்தன்மை உடையவர் என்பது வைணவ சமயக்கொள்கை. கபீர்தாசர் இறைவனைத் தலைமகனாகவும், தம்மை தலைமகளாகவும் கருதிப்பாடிய பாடல்கள் பல காணப் படுகின்றன.

"கபீர்தாசர் இறைவனின் உண்மையான பக்தர்" என்று பலர் போற்றிய போது, அவருடைய உள்ளம் வெட்கம் அடைந்ததாம். காரணம், கபீரின் இதயம் இறைவனை அதுவரைத் தொடாமையே என்பதை,

" நான்தான் உந்தன் மணமகள் என்று
நானில மக்கள் சொல்லும் போது
நாணம் கொள்கிறேன்;எந்தன்இதயம்
உன் இதயத்தைத் தொடவும்இல்லை

என்று தலைமகளின் நிலையில் நின்று பாடிவிட்டு, மற்றொரு பாடலில், இறைவனைத் (தலைவனை) தான் அடையும் காலம் நெருங்கி விட்டதாகவும் ஆனால் அவனுடைய இருப்பிடம்

செல்லுவதற்கு வழிகாட்டுபவர் யார் என்று கேட்கும் முறையில்,

“ வசந்த காலம் அருகில் வருகுது
எந்தன் அன்பன் தன்னிடம்என்னை
இணைத்து வைப்பவர் யாரே ஐயா? ”

என்கிறார்.

ஃ ஃ ஃ

ஆசைகளை விட்டு, இல்லத்தையும், மனைவி மக்களையும் விட்டுக் கானகம் செல்லுவதால் மட்டும் இறைவனை அடைய இயலாது என்பது திருவள்ளுவர் போன்ற சான்றோர் முடிவு. துறவறம் பூண்டு, உடலை வருத்திக் கொண்டு, நோன்புகளை மேற்கொள்வதால் மட்டும் இறைவனை அடைய இயலாது என்பதில் ஞானி கபீருக்கும் உடன்பாடு.

“ மனதை அன்புச் சாயம் தன்னில்
தோய்ப்பதற்குப் பதிலாய்
யோகி என்பவன் தனது உடைகளைச்
சாயம் தோய்க்கிறான் ”

என்று போலித் துறவிகளைச் சாடுகிறார் கவிஞர்.

“அவரவர்கள் செய்யும் தொழிலால் வேறுபட்டிருப்பினும், பிறப்பினால் அனைத்து உயிர்களும் சமம்' என்ற வள்ளுவர் கருத்துப் போலவே,

“ தாயின் கருவில் பிறந்திடு வோர்க்குச்
சாதியும், மரபும் இல்லை ஐயா
தெய்வீக சாரம் தன்னில் இருந்து
படைக்கப்பட்டார் மனிதர்
அனைவரும் ”

என்று கபீரின் பாடல்வரிகள் அமைந்துள்ளன.

தொழில்களைச் சார்ந்து பிரிந்திருந்த மக்கள் பிரிவு பிற்காலத்தில் சாதிகளாகக் கிளைத்தன. சமய ஆச்சாரியர்களின் கைப்பாவையாக விளங்கிய சில மன்னர்கள், தமக்கு மாறான சமய நெறியைப் பின்பற்றிய அடியார்களுக்குக் கழு மரங்களையும், சுண்ணாம்புக் காளவாய்களையும் பரிசாக அளித்துக் களித்தனர். ஆகவேதான், பிற்காலத்தில் வந்த இராமலிங்கர், ‘மதமெனன்னும் பேய் பிடியாதிருக்கவேண்டும்' என்கிறார்.

**கபீர்தாசர் இயற்றியதாகக் கூறப்படும் கவிதைகள்**

| | | |
|---|---|---|
| கோரக்நாத் கி கோஷ்டி | — | கபீருக்கும், கோரக் நாதருக்கும் நடந்த சமய சம்பந்தமான உரையாடல் |
| இராமானந்த கி கோஷ்டி | — | இராமானந்தருடன் கபீர் நடத்திய வாக்குவாதம் |
| சப்தாவலி | — | 1000 உபதேசங்கள் அடங்கியது. |
| மங்களம் | — | 100 சிறு கவிதைகள் கொண்டது. |
| வஸந்தம் | — | வஸந்த இராகத்தில் அமைந்தது. |
| ஹோலி | — | ஹோலியைப்பற்றி 200 பாடல்கள் அடங்கிய நூல் |
| ரேக்தா | — | 100 செய்யுள்கள் |
| ஜீவன் | — | பல சமயக்கருத்துக்கள் கொண்டு 500 பாடல்கள் |
| ஹிந்தோளம் | — | ஸ்தோத்திர வகையைச் சேர்ந்த 12 பாடல்கள் |
| பாரஹ்மாஸா | — | 12 மாதங்களைப் பற்றிய கவிதை |
| சாஞ்சர் | — | இதே பெயருள்ள பாக்களில் அமைக்கப்பட்டுள்ள ஸ்தோத்திரம். |
| சௌந்தீஸி | — | ஹிந்தியிலுள்ள 33 மெய் எழுத்துகளையும் ‘ஊம்' என்னும் எழுத்தையும் ஆதியில் கொண்ட 34 கவிதைகள். |
| இரமைனி | — | கபீரின் சமயத் தத்துவங்கள் அமைந்தவை |

தில்லி பாதுஷா சிக்கந்தர் ஷா தமது வயிற்று வலியைப் போக்கிக் கொள்ள காசியிலிருந்த இராமானந்தரையும், அவரது சீடராகிய கபீரையும் காண வந்தார். காசி நகரத்து வைதீகர்களும், முல்லாக்களும் சேர்ந்து கொண்டு, தில்லி பாதுஷாவிடம் சென்று கபீர்தாசரைப்பற்றிக் கோள் மூட்டினார்கள்.

கபீரைக் கொல்லும்படி அரசகட்டளை பிறந்தது. ஐம்பத்திரண்டு தடவை கபீர் மரணம் வேண்டிச் சோதிக்கப்பட்டதாக கபீர் மரபுக் கதைகள் கூறுகின்றன. அவருடைய கவிதைகளில் இருந்தும் அவற்றைப்பற்றி அறிய முடிகிறது.

ஃ ஃ ஃ

காசிக்கு அருகில் உள்ள ‘மக்கர்' என்னும் ஊரில் இறப்பவர்களுக்கு மோட்சம் இல்லை என்றும், அவர்கள் மறுபிறப்பில் கழுதையாகப் பிறப்பார்கள் என்றும் சிவபெருமான் சாபமிட்டார் என்று ஒரு நம்பிக்கை கபீர் காலத்தில் நிலவியது. இந்த மூட நம்பிக்கையைப் போக்க, தமது இறுதிக் காலத்தை மக்கரில் கழிக்கத் திட்டமிட்டார் கபீர். அவருடைய விசாலமான உள்ளத்தை,

“ கபீரன் உயிர்விடக் காசிக்குப்போனால்
இராமன் அங்கே வந்திடு வானோ?
..................................
இதயம் இராமனில் இருந்திடுமானால்
காசியும் மக்கரும் ஓரிடம் அன்றோ? ”

என்னும் அவருடைய பாடல் வரிகளால் அறியலாம்.

கவிஞன் தான் கூறப்போகும் ஒரு பொருளை விளக்குவதற்காக உவமைகளைக் கூறும் வழக்கம் எல்லாக்காலங்களிலும், எல்லா மொழிக்கவிஞர்களிடமும் இருந்துவரும் வழக்கமாகும்.

உடலை நிலமாகவும், உடலைக்காக்கும் ஆன்மாவை வீரனாகவும். துன்பம் கோபம், கர்வம், சபலங்கள் ஆகிய குணங்களைப் பகைவர்களாகவும், போர் செய்ய உதவும் வாளை 'ஹரி' என்னும் பெயராகவும் கபீர் உருவகம் செய்கிறார். மேற் கூறப்பட்ட தீய குணங்களை 'ஹரி' என்னும் வாளினால் வெட்டி வீழ்த்திய பிறகு, உடலாகிய இந்நிலத்தில் வாய்மை, தூய்மை மன நிறைவு ஆகியவை நிறைந்த ஆட்சியே நடக்கும். ஆனால் இந் நோன்பு பிற நோன்புகளை விடவும் மிகவும் அரிது என்பதை,

"வீரர் வாகையோ சிலமணி
விதவை நோன்பு அவள்சாம்வரை
உண்மை தேடுவோர் வாழ்வினில்
போரும் ஓய்தல் இல்லையே"

என்கிறார் கபீர்.

ஃ ஃ ஃ

கபீர்தாசரின் கவிதைகளில் ஆங்காங்கே காணப்படும்,

'மரப்பந்துகள் எனக்காணும் உலகுகள்'
'ஆகாய வெளியின் நடுஇடம்'
'உலகின் தாள கதி'
'வருணிக்க இயலா வசந்தக்கூத்து'

என்னும் வரிகள் நமது சிந்தனையைத் தூண்டுவனவாகும்.

ஃ ஃ ஃ

கபீர்தாசர் 1600 பதங்களும், 4500 'சகி' என்னும் வகையில் அமைந்த பாடல்களும், 134 இரமைனிகளும் எழுதியதாகக் கூறுவர். ஆனால் இவற்றில் பல இடைச் செருகல்கள் என்பவரும் உண்டு. கபீர் கவிதைகளின் இறுதியில் 'கபீர் சொல்லுகிறார்' என்று வருகிறது.

கபீர் சொந்தப்படைப்பாக 200 பதங்களையும், 20 இரமைனிகளையும், 250 சகிக்களையும் ஆய்ந்து எடுத்து அவற்றை அலகாபாத் பல்கலைக்கழகத்தார் 1961 ஆம் ஆண்டு 'கபீர் கிரந்தாவளி' என்னும் பெயரில் நூலாக வெளியிட்டுள்ளது.

கபீர் கவிதைகளைத் தொகுத்து நான்கு பிரிவுகளாக வெளியிட்டவர் சாந்தி நிகேதனைச் சேர்ந்த 'க்ஷிதி மோகன் சென்' என்பவர் ஆவார். அவற்றுள் 100 கவிதைகளை இரவீந்திரநாத் தாகூர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்.

'ஆதிக்ரந்தம்' என்பது சீக்கியர்களின் சமயநூல். இந்நூலில் கபீர்தாசர் எழுதிய 541 கவிதைகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனந்ததாஸ் என்னும் ஞானி கபீர்தாசரின் வாழ்கை வரலாற்றை கி. பி. 1645 ஆம் ஆண்டு எழுதினார். இந்நூலுக்குக் 'கபீர் சாஹப் கீ பர்சாய்' என்று பெயர் இட்டார்.

கபீர் இந்தியில் 'ஆதிகவி' என்று அழைக்கப்படுகிறார். அவருடைய கவிதைகள் பெயர் பெற்றதற்குக் காரணம் பண்டித நடையில்லாத மொழியும், எளிய சந்தங்களில் அமைந்திருப்பதுமே ஆகும்.

"கபீரின் கடவுள் யார்எனக்கேட்பின்
பிறப்பு, இறப்பு என்பதைப்
பெறாத ஒருவன்
கவலையும், இன்பமும், உருவமும்
இல்லான்
அன்னையும், பிதாவும் அவனியில்
இல்லான்
அவனேகடவுள் ஆண்டவன் அவனே"



# தூய வேங்கடவன் அருளே

கணியூர் சிவ. கிருஷ்ணன்.

மனமெலாம் கோயிலாய் வாழ்பவன் மாதவன்
மலைமிசை நின்றுகொண்டான்
தனமெலாம் தருபவள் தாமரைச் செல்வியாள்
தன்னையே வென்றுநின்றான்.
"எனதெனல்" "யானெனல்" இருபெரும் மாசுகள்
இழிந்தன என்றுசொன்னான்
கனவெனும் வாழ்க்கையில் கண்மயக் கறுத்திடக்
கனிவுடன் கீதைதந்தான்.

ஆர்த்தெழும் போர்க்குரல் அந்தநாள் கேட்குமுன்
அவனருட் தூதுசென்றான்.
தூர்த்தனோர் தம்பியால் துரோபதை கதறிட,
தூயவன் சேலைதந்தான்.
தேர்ப்பரி ஓட்டினான்; தீமைகள் வீழ்த்தினான்;
தேவனைப் பாடுமனமே!
பார்த்தனைக் காத்தவன் பாரெலாம் காக்கிறான்
பங்கயக் கண்ணனவனே!

முகிலெனும் வண்ணனை முகுந்தனை மாயனை
மூவுல களந்தவடிவை,
இகபர மிரண்டிலும் இனிமையை வழங்கிடும்
இணையிலா அழகனடியை
அகத்தினில் வைத்தவர், அனுதினம் நினைப்பவர்
அவனியில் துயரமிலரே!
சுகத்திலும் துணைவரும், துயரிலும் இதந்தரும்
தூயவேங் கடவனருளே!



ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்கா பரமேஸ்வரி

# துர்க்கையின் திருக்கோலங்கள்

நவராத்திரி விழாவில் துர்க்கைக்குப் பூசையும் விழாவும் சிறப்பாக நிகழும். வெவ்வேறு தலத்தில் வெவ்வேறு கோலத்தில் துர்க்கை எழுந்தருளியிருக்கிறாள்.

தசரா என்று அழைக்கப்படும் நவராத்திரி நம் நாட்டில் சிறப்பாகக் கொண்டாடப்படும் விழாக்களில் ஒன்று. அக்டோபர் மாதம் எல்லா இடங்களிலும் இதைக் கொண்டாடுகிறார்கள். நவராத்திரியின்போது நாம் தொழும் தெய்வம் துர்க்கை. வங்காளத்தில் இந்த விழாவை துர்க்கா பூஜை என்று சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். நம் நாட்டில் அதுவும் தமிழ் நாட்டில் இதை ஒன்பது இரவுகள் கொண்டாடுகிறோம். வீடுகளில் பொம்மைக்கொலு என்று பெயரிட்டு அழகான பொம்மைகளைப் படிப்படியாக வைத்து சிறு பெண்களும் தாய்மார்களும் அம்பாளை தொழுகிறார்கள். பராசக்தி துர்க்கையின் உருவம் கொண்டு மகிஷாசுரன் என்னும் அரக்கனைக் கொன்று மக்களையும் மாடு கன்றுகளையும் மீட்டாள் என்பது புராண விளக்கம்.

ஆச்வயுஜ மாதத்தில் வளர்பிறையில் ஆரம்பிக்கிறது நவராத்திரி. ஒன்பது இரவுகள் நடைபெறும் இந்த விழா நம் நாட்டில் கொண்டாடப்படும் நீண்டதொரு விழா. ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் இல்லாமல் கொண்டாடப்படும் விழா இது. இந்த உலகில் உயிர் இனங்கள் தழைத்தோங்க அன்னை பராசக்தியின் அருள் வேண்டும் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு கொண்டாடும் விழா இது. துர்க்கை பார்வதியின் அம்சம். சிவபெருமானின் துணைவியாக அன்புத் தெய்வமாக அவள் திகழ்கிறாள். ஆனால் துர்க்கையாக இருக்கும்போது ஒரு கொடூரமான அம்சமாக காட்சி அளிக்கிறாள். அவளை அணுகுவதற்குக் கூட பக்தர்கள் அஞ்சுகிறார்கள். பழைய காலத்தில் துர்க்கைக்கு நர பலி கொடுத்து வந்தார்கள் என்று அறிகிறோம். ஆனால் நாளடைவில் அது மிருக பலியாக மாறி தற்போது பலி பூர்ணமாக தடுக்கப்பட்டு விழாவை சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள்.

நவராத்திரி முதல் நாள் இளம் பெண்கள் அழகாக உடுத்து வீடு வீடாகச் சென்று மக்களைக் கொலுவுக்கு அழைக்கிறார்கள். கொலு வைப்பதில் பெண்களுக்கு அலுப்பே கிடையாது. படிகள் கட்டி அவற்றில் பொம்மைகளை வைப்பார்கள். சாதாரணமாக சுவாமி அம்மன் பொம்மைகள்தான் இடம் பெறுகின்றன. மண் பொம்மைகள் பீங்கான் பொம்மைகள் பிளாஸ்டிக் பொம்மைகள், சினிமா நடிகர் நடிகைகளின் உருவங்கள் எல்லாம் இன்று படிகளை அலங்கரிக்கின்றன. நாட்டின் பல்வேறு துறைகளையும் அபிவிருத்தித் திட்டங்களையும் அடிப்படையாகக் கொண்டு பொம்மைகள் செய்யப்படுகின்றன. இவை குழந்தைகளுக்கு நீதி புகட்டவும் உதவுகின்றன. இந்த விழாவில் பெண்களே முக்கியமாக பங்கெடுத்துக் கொள்கின்றனர்.

திரு. என். ராமகிருஷ்ணா,
மயிலாடுதுறை

இளம் பெண்கள் பட்டுப் பாவாடைகளும் நகைகளும் குலுங்க வெளிச் செல்லும்போது, வயதான மாதர்கள் தேவி மகாத்மியம் வாசிக்கின்றார்கள்.

தேவிக்கு ஸஹஸ்ரநாம அர்ச்சனைகள் நடக்கின்றன. கொலு பொம்மைகள் அலங்காரத்தை மட்டும் விளக்குவதில்லை. நாட்டில்பலவிதமானமக்கள் பல்வேறு துறைகளில் வாழ்க்கையை நடத்துகிறார்கள் என்பதையும் அவரவர் தங்கள் தங்கள் பணியை உலக க்ஷேமத்தின் பொருட்டுச் செய்ய வேண்டும் என்பதையும் விளக்குகின்றன. வட நாட்டில் மாப்பிள்ளைகளுக்கும் மருமகளுக்கும் விசேஷமான உபசாரம் நடக்கும்.

நவராத்திரி நம் நாட்டில் ஆதி காலம் தொட்டு கொண்டாடப்பெறுகின்றது. இராமாயண காலத்தில் ஸ்ரீராமர்கூட துர்க்கையை ஒன்பது நாட்கள் வணங்கி அதனால் நன்மையை அடைந்ததாகச் சொல்லியிருக்கிறது.

தென்னாட்டை விட வடநாட்டில் தான் துர்க்கா பூஜை சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இராமாயணத்திலிருந்து பல காண்டங்களை நாடகமாக்கி இராமலீலா என்று நடத்துகிறார்கள். முக்கியமாக அரக்கர்களுக்கும் தேவர்களுக்கும் ஏற்பட்ட சண்டையை சித்தரிக்கிறார்கள். பிரம்மாண்டமான மண் பொம்மைகள் செய்து அவற்றின்மீது வர்ண காகிதங்கள் ஒட்டுவார்கள். அவை சுமார் 50 அடிக்குமேல் இருக்கும். அவற்றை பெரிய மைதானங்களில் கட்டி வைத்து மாலை நேரத்தில் தீயிட்டுக் கொளுத்துவார்கள். நேபாளத்தில் சக்தி பூஜை நடைபெறும். இமயத்திலிருந்து குமரிமுனை வரை எல்லோரும் லோக மாதாவை வணங்கும் விழா இது. நவராத்திரியின்போது மற்றொரு முக்கியமான பூஜை நடைபெறுகின்றது. அதுதான் சரஸ்வதி பூஜை. மாணவ மாணவிகள் தங்கள் புத்தகங்களை அடுக்கி பூஜிப்பார்கள். சங்கீத வாத்தியங்களுக்கும் பூஜை செய்வார்கள். சரஸ்வதி கல்விக் கடவுள். ஆயுத பூஜை அன்று கைத்தொழில் செய்பவர்கள் தங்கள் ஆயுதங்களுக்கும் பூஜை செய்வார்கள். அன்று அவற்றுக்கு வேலை இல்லை. விஜயதசமி அன்று குழந்தைகளைப் பள்ளியில் சேர்ப்பார்கள்.

நவராத்திரி, வீரர்களுக்கு ஒரு பெரிய பண்டிகை. ஏனெனில் துர்க்கையை வீரக்கடவுளாக அவர்கள் வழிபடுகின்றார்கள். அதனால் தங்களுக்குப் பலமும் தைரியமும் வீரமும் அதிகமாகின்றன என நம்புகிறார்கள்.

தென் இந்தியாவில் மற்ற பகுதிகளிலும் தமிழ் நாட்டிலும் கோயில்களில் இந்த விழாவை எப்படிக் கொண்டாடுகிறார்கள் என்பதை ஆராய்வோம்.

தசரா என்றதுமே நம் கண்முன் நிற்கிறது மைசூர். சாமுண்டி மலைமீது மகிஷாசுரனைக் கொன்றதனால் மகிஷாசுரமர்த்தனி மலைமேல் வீற்றிருக்கின்றாள். சாமுண்டீஸ்வரி அரச குடும்பத்திற்கு தெய்வம். தசரா உற்சவமும் ஊர்வலமும் உலகப்பிரசித்தமானவை. மைசூரில் தசராவின்போது கேளிக்கைகளும் மின்விளக்கு அலங்காரங்களும் சிறப்பாகக் காணப்படும். வடநாட்டில் அழிக்கும் கடவுளாகத் தேவியைக் கொண்டாடுகிறார்கள். ஆனால் தென்னாட்டில் காக்கும் கடவுளாக வழிபடுகின்றார்கள்.

நம் கோயில்களில் துர்க்கையின் உருவத்தைச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். ஏன், துர்க்கை உருவம் இல்லாத கோயில்களே இல்லை என்று கூடக் கூறலாம். சிவன் கோவில்களில் வடக்கு சுவரில் அநேகமாக துர்க்கையின் சிலைகள் காணப்படும். துர்க்கைக்குத் தனிக்கோவில்களும் உண்டு. பலவிதமான துர்க்கையின் உருவங்கள் பற்றி இப்பொழுது பார்ப்போம்.

சில உருவங்களில் எல்லாவற்றிலும் மிகவும் பெரிதாகவும் அழகாகவும் அமைந்துள்ளது மாமல்லபுரத்தில் உள்ள மகிஷாசுரமர்த்தனி. இது பல்லவர் காலத்திய புகழ் வாய்ந்த சிற்பம். மகிஷாசுரனுக்கும் துர்க்கைக்கும் ஏற்பட்ட சண்டையைச் சித்தரிக்கிறது.

காஞ்சீபுரம் கயிலாசநாதர் கோயிலில் எட்டு கரங்களையுடைய துர்க்கையைக் காணலாம். புதுச்சேரிக்கு அருகிலுள்ள பாகூரில் நான்கு கரங்களையுடைய துர்க்கையைக் காணலாம். திருத்தணி வீரட்டேசுவரர் கோயிலில் துர்க்கை வாகனம் இல்லாமல் இருக்கிறாள். சுசீந்திரம் கோயிலில் துர்க்கை சிம்ம வாகனத்தின்மீது நின்று கொண்டு காட்சி அளிக்கின்றாள். இவளுக்கு சிம்ம வாகினி என்று பெயர். ஆவுடையார் கோவிலில் 12 கைகளுடன் காளி கை பிசைந்து நிற்கிறாள். பரமசிவனுடன் தாண்டவம் ஆடி தோற்ற கோலம் இது. சிதம்பரத்தில் உள்ள தில்லைக் காளியின் உருவம் பிரம்மாண்டமானது. திருச்சி மலைக்கோட்டையின்கீழ் பல்லவ குகையில் துர்க்கையின் உருவம் ஒன்று உளது. தருமை ஆதினம் ஆச்சான்புரம் துர்க்கை உருவம் அழகானது.

துர்க்கைக்குத் தனிக்கோவில் என்று பார்க்கும் பொழுது மிகவும் பெரியதாகவும் அழகாகவும் அமைந்துள்ள துர்க்கை தருமபுரத்தில் உள்ள துர்க்காதேவி. நவராத்திரியின்போது 9 நாட்களும் விசேஷ ஆராதனைகள் பகலிலும் இரவிலும் இங்கு நடைபெறும்.

தஞ்சை மாவட்டத்தில் கிடாத்தலைமேடு என்றும் கிராமத்தில் துர்க்கையின் உருவம் சிறப்பாக அமைந்துள்ளது. திருச்சி மாவட்டம் உள் கோட்டை என்றும் கிராமத்தில் உள்ள துர்க்கை பிரசித்தமானது. திருவாழ் கொளிப்புதூர் என்றும் ஊரில் துர்க்கை பிரசித்தம். காமரசவல்லி என்றும் ஊரில் துர்க்கை அழகானவள். திருவாரூர் கோவில் துர்க்கை உருவம் விசேஷம். அட்ட வீரட்டங்களில் ஒன்றான திருப்பறியலூரில் துர்க்கை உருவம் ஒன்று விசேஷமாக உள்ளது. இப்படியே நூற்றுக் கணக்கான துர்க்கையின் உருவங்களைப் பல ஊர்களில் காணலாம். பட்டீச்சரம், கதிராமங்கலம், அம்மன்குடி முதலிய ஊர்களில் உள்ள துர்க்கைகள் தற்போது மிகவும் பிரசித்தமாக உள்ளன. தமிழ்நாட்டில் ஒவ்வொரு கிராம தேவதையையும் துர்க்கையின் அம்சமாகவே கருதுகின்றனர். துர்க்கையை வழிபட்டால் எல்லா இடர்களும் நீங்கும். திருமணமாகாத அல்லது தாமதப்படும் பெண்களின் திருமணம் விரைவில் நடைபெறும். ஃ

# வேங்கடமும் விண்ணகரும்

பக்தர்கள் காணும்படியாகவும், கண்டனுபவித்து உருகிக் கண்ணீர் மல்கிப் பேரின்பமெய்யுணர்வு அடையும் படியாகவும், கண்ணால் காணடற் கரியனை எம்பெருமான் இவ்வுலகத்தில் பலபல கோயில்களில் அர்ச்சா ரூபமாக எழுந்தருளியுள்ளான். உண்மையிலேயே வைகுந்தம், பாற்கடல் இவற்றைவிட இந்நிலவுலகில் பக்தர்களுடன் நேராகப் பரிமாற்றம் செய்யக்கூடிய இக்கோயில்களையே அவன் மிகவும் விரும்புகிறான் என்பது முன்னோர் வழக்கு. அவற்றினுள்ளும் ஆழ்வார்கள் பாடல் பெற்ற திருத் தலங்களுக்குத் 'திவ்ய தேசம்' அல்லது 'உகந்தருளின நிலம்' என்று தனிப்பெருமை, தனிச்சிறப்பு நிச்சயம் உண்டு. அதிலும் நம்மாழ்வார் பாடிவிட்டால் இன்னும் ஏற்றம் கூடுகிறது. அப்படிப்பட்ட திவ்ய தேசங்களுக்குள், திருவேங்கடம்—திருவிண்ணகர் இவையிரண்டும் ஓர் அதிசயிக்கத்தக்க இரட்டைத் திருப்பதியாக விளங்குவதை உணர்ந்து, ஆராய்ந்து, அனுபவிக்க முடிந்தவர்கள் பாக்ய சாலிகள்!

இரண்டும் மிகவும் பழையதான திருத்தலங்கள். முதலாழ்வார்களே பாடியவை. விண்ணோரும் மண்ணோரும் தொழுவதான சிறப்பை வேங்கடம் பல பாடல்களிலே பெறுகிறது. ஒரு காலத்தில் மக்கள் எளிதில் செல்ல முடியாததாயிருந்தது. காட்டின் நடுவில் அமைந்துள்ள அஹோபில க்ஷேத்ரத்தை 'தெய்வமல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேள் குன்றமே' என்கிறார் திருமங்கை மன்னன். வேதமே பாடிய ஒரே க்ஷேத்ரம். (ரிக்வேதம், 'விகடே கிரிம் கச்ச' என்கிறது). மலையென்றாலே திருமலை அல்லது திருவேங்கடத்தைத்தான் குறிப்பிடுவதாகக் கொள்வது மரபு. எம்பெருமான் காட்டுகின்ற ஐந்து நிலைகளை (பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை) உரைக்க வந்த நம்மாழ்வார், பாடுகிறார்:—

> விண்மீதிருப்பாய்! மலைமேல்நிற்பாய்!
> கடல்சேர்ப்பாய்!
> மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும்
> மறைந்துறைவாய்!
> ........................ (VI 9.5.)

வைகுந்தம் என்ற பரம், திருவேங்கடம் என்னும் அர்ச்சை, பாற்கடல் என்னும் வ்யூஹம், பூமியில் தேடி, ஓடி, உழன்று மனிசர்க்காய்ப் படாதன பட்டதாகிற விபவாவதாரம், எல்லாவற்றிலும் மறைந்து நிற்கும் அந்தர்யாமி-என்று சொல்வது, அர்ச்சைக்கு, இணையில்லாத, தனிச்சிறுடையதான திருவேங்கடமே எடுத்துக் காட்டு என்று கொண்டதாக உணர வேண்டும்.

திருவிண்ணகரோ தன பெயரிலேயே வைகுந்தத்தை நினைவூட்ட வல்லது. தமிழ்நூலார் 'விஷ்ணு க்ருஹம்' என்பது மருவி 'விண்ணகரம்' என்றாயிற்று என்று கருதினாலும் வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தினர் விண்-நகர் என்றே பிரிப்பர். பொய்கையாழ்வார் பாடல் (77) ரசிக்கத் தக்கது:

> வேங்கடமும் விண்ணகரும் வெஃகா
> வும் அஃகாத
> பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்ன
> கரும்—நான்கிடத்தும்
> நின்றானிருந்தான் கிடந்தான் நடந்
> தானே
> என்றால் கெடுமாமிடர்.

இங்கு விண்ணகர் என்றால் எந்த இடம்? நாம் திருவிண்ணகர் என்ற ஒப்பிலியப்பன் கோயிலைக் குறிப்பதாகக் கொள்வோம். நிச்சயமாக அந்த ஊர்க்காரர்கள் அப்படித்தான் சொல்வர்! இயற்கைதானே! வியாக்யானம் செய்ய வந்த பெரியவாச்சான் பிள்ளையோ, 'இருந்தான்' என்ற வர்ணனையைக் கொண்டு, வைகுந்தமென்று கொள்கிறார். திருவிண்ணகர் திவ்யதேசத்திலே பெருமாள் நின்ற திருக்கோலமாயிற்றே, உட்கார்ந்த நிலையன்றே? அதனால்.

இங்கு ஓர் ஐயம்: பெருமாளுடைய எந்த மூர்த்தியை ஆழ்வார்கள் பாடுகின்றனர்? திருச்சித்ர கூடத்தில் கிடந்த நிலையை (மூலவர்) திருமங்கையாழ்வார் பாடுகிறார். அடுத்த பதிகத்தில் வீதியில் எழுந்தருளி வருவதையே திரும்பத் திரும்பப் பாடுகிறார் (அவர் காலத்தில் சிதம்பரம் பெருமாள் வீதியில் எழுந்தருளியிருப்பார் போலும்!). ஆனாலும் குலசேகரப் பெருமாள் அமர்ந்துள்ள

டாக்டர். வி. என். வேதாந்ததேசிகன்,
மதுரை.

பெருமாளைத்தான் (அதாவது உத்ஸவ மூர்த்தியை) வர்ணிக்கிறார். இந்த முறையில் நோக்கினால் பொய்கையாழ்வார் ஸேவித்தபோது, இன்று நின்று ஸேவை தரும் திருவிண்ணகரப்பன் ஒருக்கால் அமர்ந்த திருக்கோலமாகக் காட்சி கொடுத்திருந்தால்...? யார் மறுக்க முடியும்? யாரே அறிவர்?

ஒன்று தெரிகிறது: பக்தர்கள் மனத்தில் வைகுந்தம், திருவிண்ணகர் இவற்றிற்கிடையில் வேறுபாடு தெரிவதில்லை! இதுதான் மண்ணில் வைகுந்தம்! எல்லாம் பொன், வேதம் சொல்வதுபோல்! பெருமாள் பொன்னப்பன், மதிள்கூடப் பொன்! இதற்கும் மேலாக மற்றொன்றை நோக்க வேண்டும்: நம்மாழ்வார் பாசுரத்தில் 'தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே' என்று வரு

கிறது. (VI. 3. 2.) ஈடு உரை "இது வைகுந்தமல்லவா? வைகுந்தமே போல் இங்கும் ஒரு விரஜாநதி ஓடுகிறது. திருநாட்டாறு என்ற பெயரில்" என்ற கருத்தில் எழுதிவிட்டு, "அங்கிருக்கிறவனிங்கே வந்து நின்றால் அங்குள்ளவையெல்லாம் இங்கே யுண்டாகத் தட்டில்லையே?" என்று அதிசயிக்கிறது. அந்த ஆறு மிகச் சிறியதானதால் 'நாட்டான் வாய்க்கால்' என்றே இன்று அழைக்கப்பட்டு வருகிறது!

நிற்க. இந்த பொய்கையாழ்வார் பாசுரத்தில் 'இருந்தான்' என்ற குறிப்பிற்காக வைகுந்தம் என்று கொள்ளலாமோ? அதுவும் "உகந்தருளின தேசங்கள் பூமியில் உண்டாயிருக்க, ஸம்ஸாரமுண்டோ" என்று முன்னுரை சொல்லி, விண்ணகர் என்பதற்குப் பூமியில் உள்ள திவ்ய தேசமாகக் கொள்ளாது, மேல் வீடாக, வைகுந்தமாக அர்த்தம் செய்வது பொருந்தவில்லையே! பரமகாருணிகர் அடியேனைப் பொறுத்தருள்க!

பேயாழ்வார் பாசுரங்கள் இரண்டைக் காண்போம்:

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல்
வைகுந்தம்
கொண்டங்குறைவார்க்குக் கோயில்
போல்—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்
பூங்கடிகை
இளங்குமரன் தன் விண்ணகர். 61

விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர்
வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை—
மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம்
தென்கோட்டி
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு. 62

ரிக்வேதம் சொல்லும் "யுவா குமார:" என்பது விண்ணகரத்து இளங்குமரனாக அனுபவிக்கப்படுகிறார். முதற்பாசுரத்தின் அப்பிள்ளை உரையின் கருத்து: வேங்கடம் முதலிய திவ்ய தேசங்கள் எம்பெருமான் தன்னுடைய நித்யவாஸ ஸ்தானம் அல்லது விண்ணகர் என்று கொண்டிருந்தவை, எப்போது? என் உள்ளத்திற்கு உறைய வந்ததற்கு முன்!

அதாவது விண்ணகர் இங்குக்கூட வைகுந்தமாக எடுக்கப்பட்டுள்ளதாகத் தோற்றுகிறது. ஆயினும் பெரிய வாச்சான் பிள்ளை இங்கு திருவிண்ணகர் க்ஷேத்ரத்தையே குறிப்பிடுவதாக உரை செய்கிறார்.

திவ்ய தேசச் சேர்த்தியை ரசிப்பவர் நிச்சயமாக ஒப்பிலியப்பன் ஸந்நிதியென்றுதான் பொருள் கொள்ள முடியும்.

மேலும் ஒன்று: வேங்கடத்திற்கு அடைமொழி 'விரிதிரை நீர்' என்பது. இதைத் திருமங்கை மன்னன் இன்னொரிடத்தில் பரிமாறுகிறார்! 'விரிதிரை நீர் விண்ணகரம் மருவி நாளும் நின்றானை' (திருநெடுந்தாண்டகம் 29).

திருவேங்கடமும் வைகுந்தமும் ஒரு புடையிலொக்கும். 'திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே எனதுடலே' என்பது ஆழ்வார் அநுபவம் (X. 7. 8.). தேசிகன் 'திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு' என்கிறார்.

வேறொரு சேர்த்தியையும் அனுபவிக்க ப்ராப்தம். திருமங்கை மன்னன் ஒரு நல்சுற்றப் பதிகத்தில் (X. 1.) புதிதாகத் திருமணமான பெண் புக்ககம் போகும்போது சொந்த ஊரில் உள்ள பலரிடத்தும் விடை பெறுவதைப் போல, தனக்கு அபிமானம் மிகுந்த திவ்யதேசங்களைப் பாட முற்படுகிறார். அபூர்வமான இணைப்புக்களை இங்கு அனுபவிக்கலாம். திருமாலிருஞ்சோலையையும் திருவிண்ணகரையும் சேர்த்துப் பாடுகிறார். இது பொருளற்ற, எதிர் பாராத இணைப்பு அன்று. காண்போருக்கு மட்டுமே கவியின் கண்

(48ம் பக்கம் பார்க்க)

# நவராத்திரி பண்டிகையில் தேவி உபாஸனை

பராசக்தி ஸ்வரூபத்தை, தேவியது முழு ப்ரபாவத்தை மனதினால் தரி சிக்க முடியாது. சூட்சும ரூபத்தில் பீஜ மந்திரங்களில் உட்பட்டு நமக்குக் கோரிய பலன்களை அளிக்கிறாள் தேவி.

எனவே, யந்திரங்களில் விதிபத் தாக குரு முகமாக உபதேசம் பெற்று பூஜை செய்யும் காலமே சரத் நவ ராத்திரியாக அமைந்தது. உதாரண மாக, சென்னையை அடுத்த மாங்காடு என்ற ஊர் ஆதி காமாட்சி பஞ் சாக்னி மத்தியில் ஒற்றைக் காலில் உக்ர தவம் செய்த இடம். அங்கு அழகிய அர்த்த மேரு யந்திரம் தேவி சந்நிதியில் உள்ளது. அதைத் தரி சிக்கும் பொழுதே நமக்கு தீவிர பக்தி வெளிப்படுகிறது.

மற்றைய பாதி காஞ்சி காமாட்சி யம்மன் கோவில் முன் பூபிரஸ்தமாக வணங்கப்பட்டு வருகிறது. ஆதி சங்கர பகவத் பாதர் தரிசித்த இடங் கள் அவை இரண்டும்!

நவராத்திரியும் துர்க்கை பூஜையும் :

நேப்பாளம் வாமாசார சக்தி பூஜை தேசம். ஒரு ஏட்டில் நான்கு சக்தி பீடங்கள் வர்ணிக்கப்பட்டிருக் கின்றன. அவையாவன:

1. ஆத்ம பீடம், 2. பராபீடம், 3. யோக பீடம், 4. குஹ்யபீடம்.

கி. மு. ஏழாம் நூற்றாண்டிலுள்ள ஒரு சமஸ்கிருத கிரந்தத்தில் கீழ்க் கூறிய நான்கு பீடங்களின் பெயர் களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. ருத்ரா பீடம் (மேற்கே) காத் யாயனீ.

2. ஜலசைலா (வடக்கே) சண்டீ.

3. பூர்ணசைலா (தெற்கே) பூர் ணேச்வரீ.

4. காமரூபா (கிழக்கே) காமாச் வரீ.



அக்பர் மகாசக்கரவர்த்தியின் சிறந்த நண்பரும் 'அயினி அக்பரியின்' ஆசிரியருமான அபுல்பஜல் என்பார் கீழ்க்கண்ட நான்கு சக்தி பீடங்களை தம் நூலில் வர்ணிக்கிறார். அவை யாவன.

1. சாரதா (காஷ்மீரம்).

2. துல்ஜாபவானி (பிற்கால சத்ர பதி சிவாஜியின் இஷ்ட தெய்வம்- குலதெய்வம் (பம்பாய்).

3. காமாக்யா (அஸ்ஸாம்).

4. ஜாலந்திரி (பஞ்சாப்).

அபுல்பஜல் வர்ணனையில் முன் கண்ட ருத்ராவைக் காணவில்லை. அதற்குப் பதிலாக ஸ்ரீ சாரதாதேவி யைப் படிக்கிறோம்.

ஓரிடத்தில் பஜல் எழுதுகிறார்- "நூற்றுக்கணக்கான ஹிந்துக்கள் இங்கிருக்கும்பூமியினுள்ளிருந்தெழும் ஜ்வாலையைத் தரிசனம் செய்கின் றனர்" (ஜ்வாலாமுகியாக அது இருந் திருக்க வேண்டும்)

மார்க்கண்டேய புராணத்தில் தேவி மகாத்மியத்தின் (எழுநூறு செய்யுட் கள்) பராசக்தியின் ஜகன்மாதா பாவ மும், சத்தியத்தின் சிகரத்தையும் இந்த நவராத்திரி காலத்தில் பாரத தேசம் முழுவதும் பாராயணம் செய் கின்றனர். இந்தப் புராணத்தி லுள்ள பதிமூன்று அத்தியாயங்கள் "சண்டி" எனப் பெயர் பெற்றுப் பாராயணம் செய்யப்பட்டுவருகிறது. தவிர, ஓலைச் சுவடிகளோ அல்லது காகிதப் பிரதிகளோ பூஜையில் வைக்கப்படுகிறது.

பராசக்தியை தேவி என்கிறோம். அவளை மகாகாளி, மகாலக்ஷ்மி, மகா சரஸ்வதி என மூன்று நாட்களில் பூஜை செய்கிறோம். வங்கதேசத்தில் தேவி பூஜையை "துர்க்கா பூஜை" எனக்கொண்டாடுகின்றனர்.

நவ துர்க்கைகள் :

தேவி கவசத்தில் தேவி நவ துர்க்கைகளாக வர்ணிக்கப்பட்டிருக் கிறது.

1. சைல புத்ரீ.
2. பிரம்ம சாரிணீ.
3. சந்திரகாந்தா.
4. கூஷ்மாண்டா.
5. ஸ்கந்த மாதா.
6. காத்யாயனீ.
7. காலராத்ரீ.
8. மஹா கௌரீ.
9. ஸித்திதாத்ரீ.

---

திரு. வி. எஸ். சீனிவாசன்,
தஞ்சாவூர்.

---

நவ துர்க்கையை பூஜிப்பது வேத கால முதல் நடப்பில் இருந்து வரு கிறது.

மாதாக்கள் பின்வருமாறு:-

1. சாமுண்டி (சவவாகனம்).

2. வராஹி (மகிஷ வாகனம்) உதாரணமாக காத்மண்டுக்கருகி லுள்ள "படானிக்".



3. ஐந்த்ரீ (யானை வாகனம்).
4. வைஷ்ணவி (கருட வாகனம்) ஸ்ரீவைஷ்ணவி வடமுல்லை வாயல்.
5. நாரஸிம்ஹி
6. சிவதூதி.
7. மஹேச்வரி (ரிஷப வாகனம்).
8. கௌமாரி (மயில் வாகனம்).
9. லக்ஷ்மி (தாமரையின் மேல்).
10. பிராம்ஹி (அன்ன வாகனம்).

நவராத்ரியில் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் தேவியை சிருங்கேரியில் சாரதாவாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும் வெகு சிரத்தையுடன் பூஜை செய்து, அவர்கள் இன்று ஆயிரக் கணக்கான பக்தர்களுக்குத் தரிசனம் கொடுக்கின்றனர்.

சாதுர்மாஸ்ய விரதத்தை முடித்ததை விஸ்வரூப தரிசன அத்யாயத்தைப் பாராயணம் செய்து தூய துறவிகள் லோக க்ஷேமத்திற்காக தேவி நவாவர்ணவ ஸ்ரீ பூஜையில் யந்த்ர, மந்த்ர, தந்திரத்துடன் ஈடுபடுகின்றனர். ஏன், பாண்டவர்களில் ஒருவனான அர்ஜுனனே தேவி பூஜை செய்து வழிபட்டான்.

மகாபாரத தர்மயுத்தம் தொடங்கு முன் ஸ்ரீ கிருஷ்ண பகவானால் உபதேசிக்கப்பட்டு, அர்ஜுனன் துர்க்கா பூஜை செய்து தேவியை வழிபட்டான். இந்த ஆதிபூஜையில் ஸ்ரீதேவியை "சித்தேச்வரீ ஆர்யே மந்த்ரவாஸினி, கபிலே, கிருஷ்ண பிங்களே, பத்ரகாளி, தாரிணீ, வரவர்மிணி, சுவாஹாகாரே, ச்வதா, சைவகலா, காஷ்டா, சரஸ்வதி, சாவித்திரி, வேதமாதா" என்ற நாமங்களில் பக்தியுடன் துதித்து வழிபட்டான்.

"அப்படி உன்னை தூய மனத்துடன் உன்பெருமையைப் போற்றுகிறேன்; ஜெயம் எனக்கு வரட்டும், இம்மகா (கடுங்கோர) யுத்தத்தில் உன் அருளாலே!" எனப் பாடிப் புகழ்கிறான்.

**விஜய தசமி**

தேவி துர்க்கையைப் பூஜித்து மகா பாரத யுத்தம் தொடங்கிய நாள் விஜயனதுதசமி(விஜயன் அர்ஜுனன்) யாகும். இந்த நந்நாள் சண்டி ஹோமம் நடத்தவேண்டிய சுபதினம்.

இன்னும் காட்மண்டு (நேபாளம்) காளிகட்டம் (கல்கத்தா), ஆம்பர் (இதுஜெய்ப்பூருக்கு அருகில் உள்ளது) முதலியஇடங்களில் எல்லாம் துர்க்கா தேவிக்கு வெள்ளாடுகள்தான் பலி கொடுக்கப்படுகின்றன. அதன் ரத்தமே பிரசாதமாக பக்தர்களுக்குக் கொடுக்கப்படுகிறது என்பது உண்மை: வெறும் புகழ்ச்சியில்லை.

ஆதிசங்கர பகவத்பாதர் சென்ற விடமெல்லாம் (திருவொற்றியூர்) ரத்தமில்லாது, ஸ்ரீசக்கர யந்த்ரத்தை ஸ்தாபித்து, மஞ்சள் குங்குமம், சிகப்புப் புஷ்பங்கள் அதாவது சிகப்பு விருட்சிப் பூக்கள், செம்பருத்திப் பூக்கள், செந்தாமரை போன்ற பூக்களைப் பிரசாதமாக வழங்கி வருகின்றன. செவ்வரளிப் பூக்கள் ரொம்ப விசேஷம் என்பது முக்கிய குறிப்பாகும்.

இம்மாதிரி ஆதிசங்கரர் ஸ்தாபித்த யந்த்ரங்கள் காஷ்மீரத்திலுள்ள ஸ்ரீநகர், வாரணாசியிலுள்ள ஸ்ரீஅன்னபூர்ணி ஆலயம், சென்னைப் பட்டணத்தை அடுத்த திருவொற்றியூர், பூந்தமல்லிக்கருகிலுள்ள மாங்காடு காஞ்சி, திருவானைக்கோயில் முதலிய க்ஷேத்திரங்களில் இன்றும்காணலாம்; பக்தர்கள் அங்குச் சென்று வழிபடுவதைநாம்இன்றும் காணலாம்.

**ஆதிசங்கரரும், ஸ்ரீநகர் பண்டிதர்களும்**

தனது நான்கு சிஷ்யர்களுடன், ஆதிசங்கர பகவத்பாதர் இன்று அன்னரது பெயரால் விளங்கும் மலையில் ஸ்ரீநகரில் தங்கினார். மூன்று மைல்களுக்குப்பால் வசித்த "சக்திபூஜை" நிபுணர்களான காஷ்மீர பண்டிதர்கள் சிலகாலம் கழித்து ஆதிசங்கரரை தரிசித்து நின்றனர். அப்பொழுது ஆதிசங்கரர் "சாஸ்திரப் பிரகாரம் யதிகளை நீங்கள் வரவேற்று ஏன் பிக்ஷையிடவில்லை?" என்று கேட்க,

பண்டிதருள் ஒருவர் "குருவே! தாங்கள் தங்கியிருக்கும் இருப்பிடத்திற்குத் தொலைவில் ஒரு குன்றின் மேல் வசித்தீர்கள்; உங்களுக்கு அன்னபானம் கிடைக்காதது ஒருபுதிரே! தவிர, யோகசக்தியை ஏன் நீங்கள் உபயோகிக்கவில்லை?" என்று வினவ,

பண்டிதர்கள் துயர்ந்து "பராசக்தி உயிர் சேதனம் இம்மாதிரி உலகில் லீலை செய்கிறாள்." என்று கூறினர்.

அவர்களுள் ஒரு பண்டிதர் ஒரு மந்த்ரத்தை நன்கு உச்சரித்து, அம் மலையிலுள்ள ஓரிடத்தைத் தட்டினார். உடனே ஓர் ஊற்றில் ஜலம் மேல் நோக்கி ஓடி பிரவாகம் எடுத்தது. இன்றும் காஷ்மீரத்தில் சொல்லுகிறார்கள் — "இழந்த சக்தியின் பெருமையை சங்கரர் உணர்ந்துதான் ஸௌந்தர்ய லஹரியைப் பாடினார்" என்று.

வெகு பால்யத்திலேயே அதாவது சங்கரரின் மூன்றாவது வயதிலேயே, வியாஸபகவான் அருளால் தேவி மகாத்மியத்தைப் படித்தார் என்பது தான் நாமறிந்தது.

ஆதிசங்கர பகவத்பாதர் வேண்டுகிறார்: "ஏ, தேவி எங்கெல்லாம் என் சஞ்சலமனம் அலைகிறதோ அங்கெல்லாம் உன் திவ்ய ஸ்வரூபம் தோன்றுக! எங்கெல்லாம் தலையால் வணங்குகிறேனோ அங்கெல்லாம் உன் தாமரைத் திருவடிகள் தோன்றுக!" என்று. ★

தொடர் கட்டுரை

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

மேலும் கி. பி. 320 முதல் 600 வரை, குப்தர் காலத்துக் கல்வெட்டுகள், சக்ரதாரி, ஜனார்த்தன, சாரங்க: என்ற திருப்பெயர்கள் பூண்ட திருமாலின் ஆலயங்கள் கட்டப்பட்டன என அறிவிக்கும்.

திருமால் பிம்ப வடிவங்களை எடுத்துக் கொண்டால்:-

எம்பெருமானார் என அழைக்கப்படும் ஸ்ரீஇராமநுஜரால் மிகவும் கொண்டாடப்பட்ட, பாஞ்சராத்ரத்தின் 108 நூல்களில் திருமாலின் வடிவம் பற்றிய பல செய்திகள் கிடைக்கின்றன. ஆயினும், பாஞ்சாரத்திரத்தை விட வைகானஸ ஆகமத்தில் திருமால் வடிவமைப்புப் பற்றிய செய்திகள் அதிகம். திருமால் வடிவங்கள் நான்கு வகைப்படும். யோகிகளால் வழிபடத்தக்க யோகம், சம்ஸாரிகளால் வழிபடத்தக்க போகம், வீரர்களால் வழிபடத்தக்க வீரம், பிறருக்குத் தீங்க செய்யப்பயன்படுத்தப்படும் ஆபிசாரிகம் என இந்த நான்கில் போக வடிவத்திற்குப் பழக்கம் அதிகம். திருமாலுக்கு உரிய, முக்கியமான, 12 மூர்த்தங்களில், உபமூர்த்தங்கள் பல உண்டு. இவை முதல், இடை, கடை என மூன்றாகவும் இருக்கும். ஆக இவை மொத்தம் 36 ஆகும். இன்று நடை முறையில் போகமும் யோக போகமும் தான் அதிகம். நரசிங்கமாய திருமால் யோக போக நரசிம்மனாக இருப்பர்.

பல்லவர்காலம் ஆலயம் சமைப்பதில் சிறந்திருந்தது என்பதும் உண்டு. இவர்கள் காலத்தில், "அரங்கன் வடிவம்" ராஜஸ்தானில் முழு வராக வடிவம், கம்போடியாவில் வராகவாகனத்தில் அமர்ந்திருக்கும் வடிவம், பர்மாவில் அரங்கன்வடிவம் என்று தென்படுகிறன. வராகாவதாரம் - ஆதிவராஹன் பூவராஹன்சவேதவராஹன், லக்ஷ்மீவராஹன் என்ற படியில் பல வடிவங்களில் பூஜிக்கப்படுகிறது. வராஹம் என்பதற்கு இன்று கூறும் அசிங்கமான "பன்றி" என்ற பொருள்தானா என்பதை ஆராய்ச்சி செய்ய வேண்டும். இராமாயணத்தில் ராமபிரானை வருணிக்கையில் வால்மீகி ஏகச்ருங்கமுள்ள வராஹன் என்கிறார்; ஒரு கொம்புள்ளதாயும் வெளுப்பாயிமுள்ள வராகம் என்றால் ஒருக்கால் காண்டாமிருகத்தின் இனத்தில், ஒரு வகை வராஹமாக இது இருக்கலாமோ? எனத் தோன்றுகிறது. இந்த வராகப்பெருமானை நம்மாழ்வார் ஞானப்பிரான் என அழைப்பர். மற்றும் இவரைப் போல் எம்பெருமான் மற்றொருவர் இல்லை எனவும் அழைக்கிறார். ஸ்ரீவைணவர்களுக்கு முக்கிய ஜபமந்திரமான, 'சரம சுலோகம்' என்ற சுலோகங்கள் மூன்றில் முதன் முதலில் சரம சுலோகம் அருளியவர் இவரே. பெருமாள் எடுத்த அவதாரங்கள் கல்பபேதன, யுகபேதன எண்ணற்றவை. பிறகு இவைகளை இன்று — மத்ஸ்யம், கூர்மம் எனப் பத்தாக வரிசைப்படுத்தி, முதல் வடிவத்தை, மத்ஸ்யாவதாரம் என்றாலும், பெயரைக் கொண்டு நோக்கினால்—"ஆதிமூலமே" என்றழைத்த யானையைக் காத்தருளிய கஜேந்த்ரவரதன், ஆதிகூர்மம், ஆதிவராகம் என்பன முந்தியனவாக இருக்கலாமோ எனவும் தோற்றும் "மனோஜ்யோதி" என்ற புருஷஸூக்தமந்திரத்தின் படிக்கு பூமிதேவி யக்ஞவராகருடைய முக்கிய தேவி எனவும் தெரியவரும்.

கி.பி. 400-ல் ப்ருஹத்ஸம்ஹிதை என்ற நூலின் படிக்குத்திருமாலின் வடிவ இலக்கணம் கூறும் 5 செய்யுள்கள் உள்ளன. அதில் உள்ள விளக்கமாவது:.

திருமால் மூர்த்தங்கள் :

1. 8 திருக்கைகள் : இக்கைகள் 4 திருக்கைகள், 2 திருக்கைகள் கொண்டிருக்கலாம். இந்தப் பட்டியல்படிக்கு, எட்டுக் கைகள் என்ற அமைப்பில், வலப்பக்கத்து 4 திருக்கைகளில் கத்தி, கதை, அம்பு, அபயமுத்திரைகளும்; இடப் பக்கத்து 4 திருக்கைகளில் வில், கேடயம், சங்கு சக்கரம் என்பனவும் அமைந்திருக்கும்.
2. 4 திருக்கைகள்: இக்கைகள் வலப்பக்கம் இரண்டும் இடப்பக்கம் இரண்டும் இருக்கும். வலப்பக்கமுள்ள இரு கைகளில் அபயமுத்திரையும், கதையும் இருக்கும். இடப்பக்கமுள்ள இரு கைகளில் சங்கு, சக்கரம் இருக்கும்.
3. 2 திருக்கைகள் : இக்கைகளில் வலப்பக்கம் அபய ஹஸ்தமும், இடப்பக்கம் சங்கும் இருக்கும்; அபயஹஸ்தமோ அபயமுத்ரை - அலம்முத்ரை, குசலமுத்ரை, அனுமதி முத்ரை எனவும் இருக்கும் என்பது சிலர் கருத்து.
4. திருமார்பு : திருமார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற மரு இருக்கும். இது சிவந்த நிறமுள்ளது என்பதும் சிலர் கருத்து. ஜீவன் என்று கூறப்படும் கௌஸ்துபம் என்ற ரத்தினமும் இருக்கும்.
5. திருச்செவி : பிம்பத்தின் இருசெவிகளில் குண்டலமான இருகுண்டலங்களும் அல்லது மகரமும், குண்டலமும் இருக்கும்.
6. திருமுடி : இதற்கு 'அபிஷேகம்' எனவும் பெயர் உண்டு. இவரே பரம்பொருள் எனக்காட்ட பலவிதமான கிரீடங்களும் அல்லது முடியும் திருமால் திருமுடியில் இருக்கும். கிரீடம் வார்ப்புடனேயே அமைந்துமிருக்கும்.

சங்கு போன்ற திருக்கழுத்து, பனைகிளர்ந்தாற் போன்ற, திருத்தோள்கள், அருளும், அக்கரையும், புன்முறுவல் மாம்பழத்துக்கதுப்பு போன்ற திருக்கன்னங்கள், "வா! வா!" என்று அன்புடன் அழைக்கும் குறிகொண்டதிருக்கன்களின்வட்டம்இவைபொருந்தி மற்றைய திருமேனி அவ்யவங்கள் இருக்கும்.

மற்றும்குஷாணவிஷ்ணு அமைப்பில் எட்டுக்கும் அதிகமாக 12, 16, 24 திருக்கைகள் கொண்ட திருமாலின் மூர்த்தங்களும் உண்டு. (தொடரும்)

(44-ம் பக்கத் தொடர்ச்சி)

ளுக்கு புலப்படும். திருமலை, திரு மாலிருஞ்சோலை இவையிரண்டும் ஒரு சேர்த்தி. 'தென்னன் உயர் பொருப்பும் தெய்வ வடமலையும், என்னுமிவையே முலையாவடிவமைந்த' என்று நிலமகளைக் குறிக்கும் திருமடற் பாசுரம் இந்தசேர்த்தியை உணர்த்துகிறது. இரண்டுமே வ்ருஷபகிரி அல்லது வ்ருஷகிரி. தேசிகனின் தயா சதகம் திருவேங்கடமுடையானுடைய வ்ருஷகிரியைப் புகழ்கிறது என்றால் கூரத்தாழ்வானுடைய ஸுந்தர பாஹு ஸ்தவம் 'வ்ருஷகிரி ரயமச்யுதஸ்ய...' என்பது போல அழகர் மலையைப் பாடுகிறது.

ஆகவே மூன்றும் ஒரு புடையில் சேர்ந்து நம் சிரத்தைத் தாழ வைத்து ஆட்கொள்கின்றன. மூன்றுமே நம் வினைகளைக் களைந்து நம் கோரிக்கைகளை நிறைவேற்றுவதில் ப்ரத்யக்ஷமான பேசும் தெய்வங்களாகத் திகழ்கின்றன. 'கலௌ வேங்கட நாயக:' என்பது மூவருக்கும் பொருந்தும்.

திருவிண்ணகரப்பன் - திருவேங்கடமுடையான் இருவரும் நெடி துயர்ந்த திருமேனியுருவத்தை வெளிப்படுத்துகின்றனர். ஒரே திருக்கோலம். ஒரே ஆகம வழிபாடு. அவதாரம் ஒரே நக்ஷத்ரம், திருவோணம். முன்னவருக்கு பங்குனியில், ச்ரவணம்-ஏகாதசி சேர்ந்த தினம்; பின்னவருக்கோ புரட்டாசியில் அதே ச்ரவணம்-ஏகாதசிச் சேர்த்தி. இருவரும் வலது கரத்தைத் திருவடி நோக்கிக் காட்டிச் 'சரணடையுங்கள், இந்த சரணங்களிலே' என்று சொல்லாமற் சொல்லுகிறார்கள். 'காண்மின்கள் உலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன்' என்கிறார் நம்மாழ்வார். இந்த திருக்கைக்கோலம் மற்ற வகையைவிடப் பொருள் பொதிந்தது என்பது ரஸிகர்களுக்குப் புரியும். 'அபயஹஸ்தம்' அஞ்சேல் என்று மட்டும் சொல்கிறது, ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம் போன்ற கோயில்களில் போலே. ஆனால் திருவடி நோக்கிய கரமோ, சரணாகதி உபாயத்தைச் சுட்டிக் காட்டுவதோடு, இடது கரம் முழங்காலில் வைத்து அளவு காட்டுகிறது, சரணமடைந்தவர்களுக்கு ஸம்ஸார ஸாகரம் (துயரக்கடல்) முழங்கால் மட்டுமே, எளிதில் தாண்டக்கூடியது என்று.

இரண்டுமே த்வயமந்த்ரத்தின் பொருளைத் தெளிவுறுத்துகின்றன. 'சற்றுமகலாத அலர்மேல் மங்கையுடன் கூடிய எம்பெருமான் திருவடிகளைச் சரணமாகப் பற்றுகிறேன்' என்பதுதான் இம்மந்திரத்தின் பொருள். ச்ரமச்லோகத்தின் பொருளும் அழகாக ஸூசிப்பிக்கப்படுகின்றன:

> மாமேகம் சரணம் வ்ரஜ
> ஸர்வபாபேப்ய: மோக்ஷயிஷ்யாமி
> மா சுச:

அதாவது கண்ணன் சுருக்கமாகச் சொன்னதை இரண்டு வேங்கடாசலபதிகளும் தங்கள் நிலை, கோலம், முத்ரைகளால் போதிக்கின்றனர். இருவரும் கண்ணனாகவே போற்றப்படுகிறவர்களாயிற்றே! தேசிகன் 'கண்ணனடியிணை யெமக்குக் காட்டும் வெற்பு' என்றும் 'ப்ராஹ க்ருஷ்ணம் சடாரி:' என்றும் முறையே வலியுறுத்துகிறார். திருவிண்ணகர் இன்றும் 'ஸ்ரீ வேங்கடாசலபதி தேவஸ்தானம்' என்றே பெயர் கொண்டுள்ளது.

இன்னும் எத்தனையோ அனுபவிக்கலாம். ஆனால் தற்போது இது போதும். இந்த எம்பெருமான்களைப் பக்தியுடன் பரவிக் கலியைக் கடக்க முயல்வோமாக!

*(ஒப்பிலியப்பன் ஸந்நிதி கும்பகோணத்திலிருந்து கிழக்கே 5 கி. மீட்டரில் உள்ளது)*

*

## தன்னைச் சாராத கர்மபலன்

யமுனை நதியை கடப்பதற்குக் கரையோரம் வந்த கோபியர்கள் அங்கு வியாச பகவானைச் சந்தித்தார்கள். 'நாங்கள் நதியைக் கடப்பதற்கு இயலாதவர்களாயிருக்கிறோம். பகவானே, என்ன செய்வது?' என்று வியாசரிடம் கேட்டார்கள். 'நானும் வருகிறேன்', நாம் எல்லாரும் போவோம். அதைப் பற்றிய கவலை வேண்டாம். என் பசியாற்றுவதற்கு முதலில் ஏதாவது செய்யுங்கள்' என்றார் வியாசர். தங்கள் கைவசமிருந்த வெண்ணெய், தயிர் முதலியவற்றை கோபிமார் வியாசருக்குப் படைத்தார்கள். அவரும் அதையெல்லாம் நன்கு புசித்தார். பிறகு யமுனைக் கரையோரம் நின்றுகொண்டு, 'ஓ யமுனாதேவி! இன்று நான் உபவாசம் இருந்தது உண்மையாகில் நாங்கள் அக்கரை போய்ச் சேருவதற்கு வழிவிடுவாயாக' என்றார். உடனே யமுனை நதி இரண்டாகப் பிரிந்து அவர்கள் நடந்து போவதற்கு வழிவிட்டது. கோபியர்கள் திகைத்தார்கள். "இப்பொழுதுதான் நாம் படைத்ததை விலாப் புடைக்க இவர் அருந்தினார். உபவாசம் இருந்தது உண்மையாகில் என்று சொல்லுகிறாரே! இது எப்படிப் பொருந்தும்?" என்னும் ஐயம் அவர்களுக்கு வந்தது. ஆனால் வியாச பகவான் தாம் அருந்தியதாகக் கருதவில்லை. அந்தராத்மாவாயிருக்கும் நாராயணனுக்குப் படைத்ததாகவே அவர் எண்ணியிருந்தார். செயல் ஒன்றுக்குத் தன்னைக் கர்த்தாவாக எண்ணிக் கொள்ளாதவனை கர்மபலன் சார்வதில்லை. இதைக் கூறுவது மகான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

கமலவேணி தனபதி — திருச்சி.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

